# ஜனவரி-26





ஜனவரி 26ம் தேதி காலை சுமார் 10 மணிக்குச் சில பிரபல புள்ளிகள் வீட்டுக்கு டெலிபோன் செய்து "இன்று காலை நியூஸ் பேப்பர் படித்திருப்பீர்களே! அதில் முக்கியமான செய்தி என நீங்கள் எதை நினைக்கிறீர்கள்?" எனக் கேட்டபோது அவர்கள் சொன்னவை:

**பூர்ணம் விசுவநாதன்:**

"நான் முக்கியமானதாய்க் கருதும் இன்றைய நியூஸ் ஜனாதிபதி நீலம் சஞ்சீவரெட்டி அவர்களின் உரைதான். நாட்டில் நேர்மை, நியாயம் இவை குறைவதை ஆதங்கம் மேலோங்கக் கூறியுள்ளது என்னை மிகவும் கவர்ந்தது."

**திரைப்பட நடிகை லக்ஷ்மி:**

"எனக்கு பாலிடிக்ஸ்ல இன்ட்ரஸ்ட் கிடையாது. தினமும் 'ஹிந்து'ல விரும்பிப் படிக்கறது Woody Allen கார்ட்டூன்தான். அடுத்தது தங்கம் விலை ஏறியிருக்கா இல்லை இறங்கியிருக்கான்னு பார்ப்பேன். தட்ஸ் ஆல்."

**மதுரை சோமு:**

"வீணை வித்வான் ஸ்ரீ எஸ். பாலசந்தருக்கு அரசாங்கம் பத்மபூஷண் விருது அளித்துக் கௌரவித்துள்ளதே. அதைவிட முக்கியமானதாகவும், சந்தோஷப்படக் கூடியதாயும் வேறு ஏதாவது நியூஸ் இருக்க முடியுமா என்ன?

**ஏ. வி. எம். சரவணன்:**

"சினிமாத் துறை சம்பந்தப்பட்ட நான் தினமும் முதலில் படிப்பது தினத் தந்தி. அதிலும் குறிப்பாக சினிமாச் செய்திகள். விக டைரக்டராகியுள்ளது, கராத்தே மணி முதன்முதலாகப் பாடல்காட்சியில் நடித்தது, டைரக்டர் பாலசந்தருடைய தெலுங்குப் படம் என பல சினிமா உலக செய்திகள் வந்துள்ளன. ஆனால் 'முக்கியமானது' என்று எனக்கு ஒன்றும் படவில்லை."

**நா. பார்த்தசாரதி:**

"பால் கமிஷன் அறிக்கையை எதிர்க் கட்சித் தலைவர் கருணாநிதி வெளியிட்டது பற்றி இதுவரை உள்ளூர்த் தலைவர்கள் கருத்துச் சொல்லி வந்தனர். அகில இந்திய அளவில், முதன் முறையாக, பாரதீய ஜனதா கட்சித் தலைவர் வாஜ்பாயீ, நிருபர் கூட்டத்தில் கூறியுள்ள கருத்து சிந்திக்க வைப்பதாயும், முக்கியமானதாயும் எனக்குப் படுகிறது."

**எஸ். மாதவன்:**

"குடியரசுத் தலைவரது குடியரசு தின உரைதான் இன்றைக்கு மிக முக்கிய செய்தி. 'ஆளும் கட்சி, எதிர்க் கட்சிகளின் கருத்துக்களை மதிக்க வேண்டும். ஜனநாயகத்தின் ஒவ்வொரு அங்கமும், மோதலைத் தவிர்த்து, தேச நலனுக்குப் பாடுபட வேண்டும்' என்ற கருத்து இன்றைக்கு மிகவும் தேவையான ஒன்று."

தொகுப்பு: ஜூலி

# முக்கியமான நியூஸ் எது?












உலகிலே முதன் முதலில் குவார்ட்ஸ் கைக்கடிகாரம் செய்தளித்த ஸீக்கோ, தரத்திற்கு முன்னோடியாகும்.

அதிநவீன கடிகாரத் தொழில் நுட்பத்திலே ஏனைய நாடுகளுக்கீடாக இந்தியாவும் திகழ உதவுகிறது ஸீக்கோ-ஆல்வின் ஒத்துழைப்பு.

நவீன தரமும், அழகும், துல்லியமுங்கொண்ட மெகானிகல், ஆட்டோமாடிக், குவார்ட்ஸ் கைக்கடிகார வகைகள்.

அதிக நம்பகம்; ஸெர்வீசிங் வசதி, அழகான பாணிகள், தாயிக்க தொழில்நுட்பம்.

ஜப்பான், ஸீக்கோ லைசென்ஸின்கீழ் உருவாகி ஆல்வின் என்ற பெயரில் விற்பனையாகின்றன.

**ஆல்வின்**
கைக்கடிகாரங்கள்
லைசென்ஸ் ஸீக்கோ

காலம் எட்டும் புதுச்சிகரம்

HTB-HAM-7654



[ஜனவரி 24ம் தேதி, இரவு 9 மணி. மீனம்பாக்கம் விமான நிலையம். டெல்லியி லிருந்து வந்த விமானத்தில் இறங்கினர் பார தீய ஜனதா கட்சியின் தலைவர் வாஜ்பாயீ. ''அடல்ஜி! ஜிந்தாபாத்!'', ''வாஜ்பாயீ வாழ்க!'' என்ற கோஷங்கள் விமான நிலை யத்தை அதிரடிக்க, முதல் மாடியில் இருக் கும் ஓய்வு அறைக்கு அழைத்துச் செல்லப் பட்டார். தமிழ்நாடு பாரதீய ஜனதா தலை வர் நாராயண ராவ், '' 'கல்கி'க்கு தாங்கள் தனிப்பட்ட (exclusive) பேட்டி தரவேண்டும்'' என்று கேட்டுக் கொண்டவுடன் ''நோ, நோ இண்டர்வ்யூஸ்'' என்றார் சிரித்துக் கொண்டே.

வார்த்தையில் மறுப்பு இருந்தாலும், சிரிப்பு சற்று நம்பிக்கை அளிக்கவே நான் சற்று நேரம் உட்கார்ந்திருந்தேன். வந் திருந்த கட்சித் தொண்டர்களையும் சில தலை வர்களையும் பேசி அனுப்பிய பிறகு நாரா யணராவ் என்னை வாஜ்பாயீ அருகில் வரச் சொன்னார். நான் வாஜ்பாயீ அவர்களிடம் 'அரை மணி நேரத்தில் பேட்டி முடிந்துவிடும்' என்று சமாதானமாய்க் கூறியவுடன், உடை யைக்கூட மாற்றச் செல்லாமல் Give me the questions என்றார். கேள்விகளைக் கையில் வைத்துக் கொண்டு கண்ணை மூடிச் சிந்தித்து அவர் சொன்ன பதில்கள் இதோ....]

கேள்வி: சரண்சிங், பகுகுணா மற்றும் உங் களுக்கும் பிரதம மந்திரி நாற்காலியைப் பிடிப்பது ஒன்றுதான் லட்சியம் என்று இந்திரா சொல்லியிருக்கிறாரே? அதைப் பற்றி என்ன கூறுகிறீர்கள்?

பதில்: நாங்கள் அரசியல் நடத்திக் கொண் டிருக்கிறோம். கதா காலட்சேபம் செய்து கொண்டிருக்கவில்லை. மக்களுக்கு எங்களின் கொள்கைகளும் திட்டங்களும் பிடித் திருக்குமானால், மக்களே எங்களை அந்தப் பதவிக்கு அனுப்புவார்கள். இப்பொழுது நாட்டில் நடந்து கொண்டிருக்கும் ஊழல் களையும், திறமையற்ற நிர்வாகத்தையும் எங்களால் ஒழிக்க முடியும் என்று மக்கள் நினைத்தால் அவர்கள் எங்களை அந்தப் பதவிக்கு அனுப்புவார்கள். பிரதம மந்திரி பதவிதான் எங்கள் லட்சியம் என்று சொல் வதெல்லாம் பிரச்னையிலிருந்து மக்களைத் திசை திருப்பத்தான்.

கே: 1977ல் நடந்த மக்கள் எழுச்சி மறுபடி நடக்க வாய்ப்பு இருக்கிறதா? இப் பொழுது எதிர்க் கட்சிகள் மீண்டும் இணைந்தால் மக்கள் அவர்களை நம்புவார் களா? எதிர்க் கட்சிகள் இணைந்து மறுபடி ஜனதா உருவானால் அந்தக் கட்சி ஒற்று மையுடன் நீடித்து நிற்குமா?

ப: 1977ல் எதிர்க் கட்சிகள் இணைந்தது பதவியைப் பிடிப்பதற்காக அல்ல; ஜனநாயகத்தைக் காப்பாற்றுவதற்காகத் தான். 1977ல் இருந்த சூழ்நிலை இப் பொழுது இல்லை. சில முக்கியமான பிரச்னை களில் மற்ற கட்சிகளுடன் இணைந்து போராட பாரதீய ஜனதா தயாராக இருக்கிறது. தேசிய முக்கியத்துவம் வாய்ந்தசில விஷயங்களில் எதிர்க்கட்சிகள் ஒன்று சேர்ந்தால்தான், மக்களும், கட் சித் தொண்டர்களும் எங்களை நம்புவர். மற்றபடி பாரதீய ஜனதா தனது தனித் தன்மையைக் காப்பாற்றிக் கொள்ள விரும்புகிறது.

கே: இந்தியாவிலேயே மிகவும் பிரபலமான, எல்லா மக்களுக்கும் தெரிந்த ஒரே தலைவர் இந்திரா காந்திதான் என்றும், அவரால் தான் இந்தியாவை ஒற்றுமையாக வைத் திருக்க முடியும் என்றும் கூறுகிறார்களே?

ப: இந்தியாவுடைய ஒற்றுமை எந்தத்தனி மனிதரையோ அல்லது எந்தக் கட்சி யையோ நம்பி இல்லை. இந்திய மக்கள் ஒவ்வொருவரும் தங்களை இந்தத் தேசத்துடன் ஐக்கியப்படுத் திக்கொண்டிருக்கின் றனர். ஒவ்வொரு இந்தியனுடைய

# தனியாருக்கா நம் நாடு இல்லை



வாஜ்பாயீ

பொறுப்புணர்வும், தேசப் பற்றுமே இந்திய ஒற்றுமையைக் காப்பாற்றிக் கொண்டிருக்கின்றன. தனிப்பட்ட தலைவர்கள் வருவார்கள், போவார்கள். அவர்களை நம்பி இந்தியாவின் ஒருமைப்பாடு இல்லை.

கே: சில காலம் நீங்கள் வெளியுறவு மந்திரியாக இருந்திருக்கிறீர்கள். இப்பொழுது வெளியுறவு மந்திரியாக இருக்கும் நரசிம்ம ராவ் செயல்படும் விதம் பற்றி உங்கள் கருத்து என்ன?

ப: ஓரளவு பாராட்டத் தக்க விதத்தில் இருக்கிறது. ஆனால் எந்தப் பதவியையுமே வகிக்காதவர்களிடமிருந்தும் மற்றும் பிரதம மந்திரியின் அலுவலகத்தைச் சேர்ந்தவர்களிடமிருந்தும் அவருக்குப் பிரச்னைகள் வருகின்றன. அவருடைய அலுவல்களில் அனாவசியத் தலையீடுகள் இருக்கின்றன. அவரைச் சுதந்திரமாகச் செயல்பட விட்டால் நன்றாக இருக்கும்.

கே: இந்திரா காந்தி அடிக்கடி போர் அபாயத்தைப் பற்றிப் பேசி வருகிறார். இந்தியா யுத்த களத்தில் இறங்க வாய்ப்பிருக்கிறதா?

ப: ஆப்கானிஸ்தானை சோவியத் ரஷ்யா ஆக்ரமிப்புச் செய்துள்ளதை ஒரு காரணம் காட்டி, ஏகப்பட்ட ராணுவ தளவாடங்களை பாகிஸ்தான் அமெரிக்காவிடமிருந்து வாங்கியிருக்கிறது. இதனால் நாம் சற்று எச்சரிக்கையாக இருக்க வேண்டிய நிலையில் இருக்கிறோம். இந்திரா காந்தியின் இந்த ''போர் அபாயப் பேச்சை'' அதிகப்படுத்தவோ அல்லது குறைத்து மதிப்பிடவோ கூடாது. நம்முடைய கணிப்பு யதார்த்தமாக இருக்க வேண்டும். யுத்த அபாயம் உடனடியாக இருப்பதாகக் கூற முடியாது. ஆனால் நமது அண்டை நாடுகளின் போக்கைக்கவனித்துக்கொண்டு வருவது எதிர்காலத்துக்கு நல்லது.

கே: இன்று நாடு இருக்கும் சூழ்நிலையில் இந்திரா காங்கிரஸ் கட்சிக்கு மாற்றுக் கட்சி எதுவாக இருக்குமென்று நினைக்கிறீர்கள்?

ப: இந்திரா காங்கிரஸுக்கு ஒரு மாற்றுச் சக்தியாக இருப்பதற்கு எல்லாத் தகுதிகளும் பெற்ற ஒரே கட்சி எங்கள் பாரதிய ஜனதாதான். ஆனால் எங்களுக்கும், சில பிரிவினரிடமிருந்தும், இந்தியாவின் சில பகுதிகளிலிருந்தும் ஆதரவு தேவை.

கே: தென்னகத்தில் பாரதிய ஜனதா வளர்ச்சி பெறாததற்குக் காரணம் என்ன?

ப: ஆந்திரா, கேரளா, கர்நாடகத்தில் எங்கள் கட்சி முன்பிருந்ததை விட நன்றாக வலுப்பெற்றிருக்கிறது. ஆந்திராவில் விசாகபட்டினம் நகர சபையை எங்கள் கட்சி கைப்பற்றியிருக்கிறது. தமிழ்நாட்டைப் பொறுத்தவரை கட்சி இன்னும் நன்றாக வளர வேண்டும். தென்னகத்தில் உள்ள மக்களிடையே பாரதிய ஜனதா, தற்போது அகில இந்திய கட்சி என்ற அந்தஸ்தைப் பெற்றிருக்கிறது. வட பகுதியில்இருப்பவர்கள் நடத்தும் கட்சி என்ற மனப்போக்கு தற்போது இல்லை.

கே: மறுபடி எதிர்க் கட்சிகள் இணைவதற்கு ஆர். எஸ். எஸ். ஒரு தடைக் கல்லாக இருக்குமா?

ப: ஆர். எஸ். எஸ். ஒரு அரசியல் கட்சி அல்ல. அது ஒரு கலாசாரக் கழகம். ஜனதா கட்சி உடைந்ததற்கு ஆர்.எஸ். எஸ். ஒரு காரணமல்ல. அது இந்தப் பிரச்னையில் தலையிடவே இல்லை. ஜனதாவை உடைக்க வேண்டும் என்று நினைத்தவர்கள் ''இரட்டை உறுப்பினர் பிரச்னை'' என்ற ஒரு காரணத்தைக் காட்டி அதை உடைத்தார்கள். பாரதிய ஜனதா கட்சியைச் சேர்ந்தவர்கள் தாராளமாக ஆர். எஸ். எஸ்.ஸுடன் தொடர்பு வைத்துக்கொள்ளலாம். அதை நாங்கள் தடுக்க மாட்டோம்.

கே: சமீபத்தில் மத்திய மந்திரி சபையில் பல மாறுதல்கள் நடந்ததன் விளைவாக நல்லது ஏதும் நடக்கும் என்று நினைக்கிறீர்களா?

ப: சுதந்திர இந்தியாவில் முதல் முறையாக ராஜ்ய சபையைச் சேர்ந்த ஒருவருக்கு நிதி மந்திரி பொறுப்பு அளிக்கப்பட்டிருக்கிறது. அரசு லோக் சபாவுக்குத்தான் பதில் சொல்லக் கடமைப் பட்டிருக்கிறது. ஆர். வி.யின் மாறுதல், பதவி இறக்கமா, அல்லது ஏற்றமா என்றே தெரியவில்லை. அடிப்படையாகச் சில விஷயங்களும், தலைமையும் மாறாத வரையில் யார் மந்திரியானால் என்ன? பெரிதாக ஒரு மாறுதலும் நடந்துவிடப் போவதில்லை.

கே: பி.ஜே. பி.யின் அடிப்படைப் பொருளாதாரக் கொள்கை காந்திய சோஷலிஸம் என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது. நாட்டு நன்மைக்குத் தேவையானது, சுதந்திரப் பொருளாதாரமும், சுதந்திரமாக தொழில் நடத்தும் முறையும்தான் என்று நேரிடையாக ஏன் சொல்லக் கூடாது? சோஷலிஸம் என்ற வார்த்தையை வைத்துக் கொண்டு பிரபலமடையவிரும்புகிறீர்களா?

ப: எங்களுடைய கொள்கை காந்திய சோஷலிஸம்தான். தொழில் நடத்துவதில் கழுத்தை நெரிக்கிற போட்டி (Cut throat competition) இருப்பதை நாங்கள் விரும்பவில்லை. பொருளாதார அதிகாரங்களை பரவலாக (decentralize) வைத்துக் கொள்ள வேண்டும். சுதந்திரப் பொருளாதாரம் என்ற விஷயத்தைப் பெரிய தொழிலதிபர்கள் கூட விரும்பவில்லை. என்னைப் பொறுத்தவரை அது ஒரு மாயை என்றே கூறுவேன். அத்தியாவசியப் பொருள்களின் உற்பத்தியைச் சிறு தொழிலதிபர்களிடம் ஒப்படைக்க வேண்டும். நாட்டில் சிறு தொழில்கள் பெருகினால், பொருளாதாரமும், வேலை வாய்ப்பும் நல்ல நிலையில் இருக்கும் என்பது என் கருத்து. 'சோஷலிஸம்' என்ற வார்த்தையை வைத்து நாங்கள் பிரபலமடையத் தேவையில்லை.

கே: அஸ்ஸாம் பிரச்னைக்குச் சரியான தீர்வு என்ன?

ப: இந்தப் பேச்சு வார்த்தைகள் மிகவும் நீண்ட நாட்கள் இழுத்தடிக்கும். உடனடியாகச் செய்ய வேண்டியது அஸ்ஸாம் — பங்களா தேஷ் எல்லையில் ஊடுரு

# போக்கிரி சக்கரவர்த்தி







**ஐஃபெல் டவரைக் கைப்பற்றி விட்டார்கள் பாரிஸ் நகரம் திமிலோகப் படுகிறது!**

சீற்றுவட்டாரத்தில் குறிப்பிட்ட ஓர் எல்லைக்குள் எது அல்லது யார் வந்தாலும் தானியங்கு முறையில் லாஸர் கதிர்களை அனுப்பி அழித்துவிடும் சுழல் துப்பாக்கிகளை அமெரிக்கா கண்டுபிடித்துப் பரீட்சித்துப் பார்க்க, அந்தத் துப்பாக்கிகளில் நான்கு காணமல் போய்விடுகின்றன!

அவை வந்து சேர்ந்தது உலகிலேயே சிறந்த போக்கிரிராஜாவிடம். அடிக்கடி வேஷம்மாறி, சட்டத்தின் பிடியிலிருந்து தப்பி, கோடி கோடியாகச் செல்வம் சேர்த்துவிட்ட இந்த அயோக்கியச் சக்கரவர்த்திக்கு இனி பணம் அவசியமில்லைதான். ஆனாலும் அநீதியான, ஆபத்தான காரியங்களில் இறங்கி வெற்றி பெறுவதிலே உள்ள 'கிக்' அவனுக்குத் தேவைப் படுகிறது.

இம்முறை அவன் பாரிஸில் உள்ள ஐஃபெல் டவரைக் கைப்பற்றி அதில் வெடி குண்டுகளை ஆங்காங்கே வைத்து, தான் கேட்கின்ற கோடிக் கணக்கான பணத்தை அரசாங்கம் தரவில்லையானால் அந்தக் கோபுரத்தைத் தகர்த்துவிடப் போவதாக அச்சுறுத்துகிறான்.

இதில் தனக்கு உதவ பல்வேறு தேசங்களி லிருந்து சில போக்கிரி சிற்றரசர்களைத் தரு விக்கிறான். ஐஃபெல் டவரை அவர்கள் கைப்பற்றுவதுடன் அதைப் பார்வையிட வந்த அமெரிக்க ஜனாதிபதியின் தாயாரையும் அதிலேயே சிறைப்படுத்தி விடுகிறார்கள். லாஸர் துப்பாக்கிகளை அங்கங்கே பொருத்தி யாருமே அணுக முடியாமல் செய்துவிடு கிறார்கள். ஒரு மினி டெலிவிஷன் நிலையத்தை நிறுவி தங்கள் நிபந்தனைகளை அரசுக்கு அறி விக்கிறார்கள்.

ஐஃபெல் டவரும் அமெரிக்க ஜனாதிபதியின் தாயாரும் காப்பாற்றப்படுவதெப்படி? போக் கிரி சக்கரவர்த்தி என்ன ஆனான்? மெய் சிலிர்க் கும்படியாகத் திரைப்படம் வளர்ந்து முடி கிறது. வல்லவனுக்கு வல்லவனாக, ஐ. நா. சபையின் சர்வதேச போலீஸ் தலைவர் ஒருவர் காட்டும் சாணக்கியம்தான் அலிஸ்டேர் மக்லீன் எழுதிய திரைக்கதையின் ஜீவன். Hostage Tower படம் பார்க்கும்போது கடிகாரத்தின் டிக்டிக்குடன் இதயத்தின் திக் திக் போட்டியிடுகிறது. —த.மு.ரா.

---

வல் இல்லாமல் பார்த்துக் கொள்வது தான். இதைப் பற்றி நாங்கள் விரிவாகப் பாராளு மன்றத்தில் பேசியிருக்கிறோம். மற்றபடி இந்தப் பேச்சு வார்த்தைகள் சிலவற்றில் நாங்கள் கலந்து கொள்ளாத தற்குக் காரணம் அந்தக் கூட்டங்களில் எந்த ஒரு உருப்படியான முடிவும் ஏற் படாது என்பதால்தான்.

கே: அ.தி.மு.க. — தி.மு.க. கட்சிகளின் அரசியல் நடத்தை குறித்து என்ன கருது கிறீர்கள்?

ப: இரண்டு கட்சிகளும் ஒன்றோடொன்று போட்டி போட்டுக் கொண்டு இந்திரா வின் ஆதரவைப் பெறத் துடித்துக்கொண் டிருக்கின்றன. இரண்டுமே சரியான தண் டனையைப் பெறப்போகின்றன.

கே: கல்தாரி சகோதரர்களுக்கு நீங்கள் உதவிசெய்துள்ளதாக சுப்பிரமணியசுவாமி குற்றம் சாட்டியுள்ளாரே....

(இந்தக் கேள்வியைப் படித்துப் பார்த்து விட்டு ''இந்த சுவாமிக்கு நான் பதில் சொல்லத் தேவையில்லை'' என்று கூறியபடியே எழுந்து சென்று உடை மாற்றச் சென்று விட்டார் வாஜ்பாயீ.)

-பேட்டி: ப்ரியன் புகைப்படம்: சுபா
கார்ட்டூன்: நடனம்

# கண்ணுக்கோர் ஆலயம்

காஞ்சிப் பெரியவரின் அருளாசியுடன் சென்னையில் தொடங்கப் பெற்றது சங்கர நேத்ராலயா என்ற நவீன கண் மருத்துவமனை. காஞ்சிப் பெரியவரிடம் அளப் பரிய பக்தியும் ஈடுபாடும் கொண்டவர் கிரீஸ் அரசி, ஃபிரெடரிகா. இவ்வரசியின் மகள் ஸோபியா இன்று ஸ்பெயின் நாட்டு ராணி. எனவே ஸோபியா வுக்கும் இந்தியாவின் தொன்மையான பண்பாடு களில் ஆழ்ந்த ஈடுபாடு ஏற்பட்டதில் வியப்பில்லை. சங்கர நேத்ராலயாவில் ஒரு முறை ஒரு நவீனக் கருவி பழுது பட்டபோது ஸ்பெயின் அரசி தமது சொந்தச் செலவில் நிபுணரை அனுப்பி அதைச் செப்பனிடச் செய்தார். ஸோபியாவின் சகோதரி ஐரின் இந்தியா விலேயே தங்கி இந்திய கலாசாரத்தையும் வேதாந்த தத்துவக் கருத்துக்களையும் கற்றறிந்து வருகிறார். மனைவி மூலமாக இந்தியப் பண்பாட்டில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டார் ஸ்பெயின் மன்னர் கார்லோஸ். அவர் சமீபத்தில் தமது ராணியுடன் சென்னை வந்து சங்கர நேத்ராலயாவின் புதிய ஐந்து மாடி கட்டி டத்தைத் திறந்து வைத்தார், தமிழக முதல்வர் தலைமையில். சங்கர நேத்ராலயாவில் என்ன நடக் கிறது? சற்று எட்டிப் பார்ப்போமா?

ஆந்திரப் பிரதேசத்தைச் சேர்ந்த இளை ஞருக்கு ஏற்கனவே கண் ஒன்றில் பார்வை இல்லை. இன்னொன்றிலும் லேசான மச மசப்பு வர ஆரம்பிக்கிறது. கறுப்புப் புள்ளி களாகவும் நூலிழைகளாகவும் தெரிந்து பார் வையை மறைக்கிறது. அவர் பயந்துபோய் சென்னையில் உள்ள பிரபல டாக்டரிடம் வரு கிறார். டாக்டருக்குப் பார்த்த உடனேயே தெரிந்து விடுகிறது – இது புது ரத்த நாளங்கள் உண்டாவதால் விளைகிற கோளா றென்று. (விழிகளிலிருந்து இரத்தச் சொட் டுகள் பிறகு கசியத் தொடங்குமாம்). அவர் யோசனை செய்கிறார். ஏற்கனவே ஒன்றில் பார்வை போனவர். இன்னொரு கண்ணில் ஆபரேஷன் செய்வது கத்தி முனையில் நடப் பதற்கு ஒப்பாகும். நோயாளியால் வெளி நாடு செல்ல முடியாத நிலையில் அங்கிருந்தே ஒரு டாக்டரை (மோகன்தாஸ்) இங்கு வர வழைக்கிறார். அயல் நாட்டிலிருந்து வந்த டாக்டருக்கு இங்குள்ள மருத்துவ மனையின் வசதிகள், நவீன உபகரணங்கள், சூழ்நிலை எல்லாம் தமக்குப் பழக்கமான மேல் நாட்டு மருத்துவ மனை போன்றே தோன்றுகிறது. ஆபரேஷன் சக்ஸஸ்!

அத்தனை வசதிகளும் தூய்மையும்கொண்ட இடம்: சங்கர நேத்ராலயா.

''இதுபோல் ரத்த நாளங்கள் உருவாகக் காரணம்?''

''ஒரு காரணம் டயாபடீஸ். ஆனால் வெளி யில் அறிகுறிகள் தெரியாது. எனவே நீரிழிவு நோய் உள்ளவர்கள் கண் டாக்டரிடம் அவ் வப்போது காட்டி வருவது நல்லது.''

''இந்த ஆபரேஷனை நீங்களே செய்திருக்க லாமே?'' என்று டாக்டர் பத்ரிநாத்தைக் கேட்கிறோம்.

''அந்த இக்கட்டான சந்தர்ப்பத்தில் எங் களுக்கு வேறு வழி தோன்றவில்லை. அந்தச் சிகிச்சைக்குப் பெயர்photo coagulation கண் ணுக்குள் ரத்த நாளங்கள் உருவாகும் ஆதார மான பகுதியை ஒளிக் கதிர் மூலம் அழித்து விடுகிறோம்'' என்று அடக்கமாகக் கூறும் பத்ரிநாத் அவர்களும் கைதேர்ந்த கண் சஸ் திர சிகிச்சை நிபுணர்தான். விஞ்ஞானம் எங்கே முடிகிறது கலைத் திறன் எங்கே தொடங்குகிறது என்று கண்டறிய முடியாத படி லாகவமாகச் செயல்படுகிறவர்.

ஒரு பெண்ணுக்கு அடுத்த மாதம் கல் யாணம். தேதி நிச்சயமாகியிருக்கிறது.இன்று அவளுக்கு அடியோடு பார்வைபோய்விட்டது. மணப்பெண்ணுக்கும் பெற்றோருக்கும் எப்படி

1



2





1 ✕ நேத்ராலயாவைக் கண்ணெனக் காக்கும் கண் டாக்டர் பத்ரிநாத்

2 ✕ டாக்டர் மோகன்தாஸ் ஜினி

✕ நுண்ணிய ஒலி அலைகளை எழுப்பி எதிரொலிக்கோட் கொண்டு கண்களை ஆராயும் அல்ட்ரா ஸோனோ ரோக்ரபி என்ற நவீன உபகரணத்தைப் பயன்படுத்து றவர் மேல்நாட்டிலிருந்து சங்கர நேத்ராலயாவுக்கு விஜயம் செய்த டாக்டர் ரிச்சர்ட் டால்லோ. அருகே டாக்டர் மேரி ஆப்ரஹாம்.

இருக்கும்? பத்ரிநாத்திடம் ஓடோடி வந்தார்கள். விழித் திரை தன் நிலையிலிருந்து நழுவிவிட்டது (detachment of retina) என உணர்ந்து ரண சிகிச்சை செய்தார். நுணுக்கமான அந்தச் சிகிச்சை வெற்றி பெறப் பார்வை திரும்பிக் கல்யாணம் தடங்கலின்றி நடந்தேறியது!

இப்படி எத்தனையோ கதை கதையாகச் சொல்லலாம்.

நேத்ராலயாவில் ஆராய்ச்சிப் பிரிவும் உண்டு. தாங்கள் கண்டுபிடித்தவைகளை வெளி நாடுகளில் கருத்தரங்குகளில் படித்துக் காண்பிக்கிறார்கள். அதற்கு நல்ல வரவேற்பு இருக்கிறது.

கிட்டத்தட்ட ஒரு நாளைக்கு இந்த 'நேத்ராலயா'வில் நூறு பேர் 'கன்சல்ட்' செய்ய வருகிறார்கள் என்றால், மாதம் நூறு பேர் ரண சிகிச்சை பெற்றுக் கொள்கிறார்கள். மூந்நூறுக்குக் குறைவான மாத வருமானம் என்றால் சிகிச்சை இலவசம். அது போல் பெற்றுக் கொள்பவர்கள் 15 சதவிகிதம் இருக்கலாம்.

- தமயந்தி

---

# எவ்வளவு தெரியும்? திரையுலகு பற்றி...



1 தமிழில் வெளிவந்த முதல் பேசும் படம்
(அ) ஹரிச்சந்திரா, (ஆ) காளிதாஸ் (இ) ராமாயணம்

2 தொடர்ந்து மூன்று தீபாவளிகளைக் கண்ட படம் எது?
(அ) சிந்தாமணி (ஆ) நந்தகுமார் (இ) ஹரிதாஸ்

3 அன்று 'இனிமா சென்ட்ரல்' என்ற பெயருள்ள தியேட்டரில்தான் முதல் பேசும்படம் வெளியிடப்பட்டது. அந்த தியேட்டரின் இன்றைய பெயர் என்ன?
(அ) சித்ரா (ஆ) மகாலட்சுமி (இ) ஸ்ரீ முருகன்

4 ஆங்கிலப் படங்களுக்கு நிகராகத் தயாரிக்கப் பட்டதும், 600 பிரதிகள் எடுக்கப் பட்டதுமான படம் எது?
(அ) அசோக்குமார் (ஆ) சிந்தாமணி (இ) சந்திரலேகா.

5 தமிழ்த் திரைப்பட உலகம் பொன் விழாக் கொண்டாடும் இந்த நேரத்தில் அதன் ஆரம்ப வருடமான 1931ம் வருடம் வெளிவந்த தமிழ்ப் படம் எவ்வளவு?
(அ) ஒன்று (ஆ) மூன்று (இ) நான்கு

6 பாடல்களே இல்லாமல் எடுக்கப்பட்ட படம் ஒன்று 1954ம் வருடம் வெளிவந்தது? அந்தப் படம் எது?
(அ) கனவு (ஆ) அந்த நாள் (இ) துளி விஷம்.

7 இந்திய அரசின் வெள்ளிப் பதக்கம் பரிசு பெற்ற முதல் தமிழ்ப் படம் எது?
(அ) மனோகரா (ஆ) கூண்டுக்கிளி (இ) மலைக்கள்ளன்

8 தமிழகத்தில் தயாரான முதல் வர்ணப் படம்?
(அ) வீர பாண்டிய கட்டப் பொம்மன்
(ஆ) அலி பாபாவும் 40 திருடர்களும்
(இ) கொஞ்சும் சலங்கை

9 அயல் நாட்டில் பரிசு பெற்ற முதல் படம் எது?
(அ) காதலிக்க நேரமில்லை (ஆ) எங்க வீட்டுப் பிள்ளை (இ) வீரபாண்டிய கட்டபொம்மன்

10 தமிழகத்தில் வெளிவந்த முதல் சினிமாஸ்கோப் படம் எது?
(அ) காரைக்கால் அம்மையார் (ஆ) நீரும் நெருப்பும் (இ) ராஜ ராஜ சோழன்

தொகுப்பு ''சலன்''

விடை 58ம் பக்கம் பார்க்க

# புத்துணர்ச்சிதரும் தூய சுவாசம்... உறுதியிக்க, ஆரோக்கியமான பற்கள்



## அளித்திடுதே கோல்கேட் டென்டல் க்ரீம்

ஒவ்வொரு சாப்பாட்டிற்குப் பிறகும் கோல்கேட் கொண்டு உங்கள் பற்களைப் பிரஷ் செய்யுங்கள். உலகெங்கும் பல் டாக்டர்கள் சிபாரிசு செய்வதைப் போலவே அது உங்களைப் பாதுகாக்கிறது.

உங்கள் பற்களுக்கிடையே தங்கியுள்ள உணவுத் துணுக்குகளில் பாக்டீரியாக்கள் வளர்கின்றன. இவை வாய் துர்நாற்றத்தையும், பிறகு வலிமிக்க பற்சிதைவையும் உண்டாக்கும்.

எனவே சாப்பிட்டு முடித்தவுடனேயே கோல்கேட் முறையில் பற்களைப் பிரஷ் செய்யுங்கள். அது புத்துணர்ச்சியுடன் இனிய சுவாசத்தைத் தருவதற்கும், பற்களுக்கு வெண்மையளிப்பதற்கும், பற்சிதைவை எதிர்ப்பதற்கும் மிகவும் சக்தி வாய்ந்தது என்று நிருபணமாகியுள்ளது.

**கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும், பெப்பர்மின்ட் சுவை பல்துலக்குவதை ஒரு இன்ப அனுபவமாக்குகிறது.**

**நம்பகமான, கோல்கேட்டின் செயல் புரியும் முறை**



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே சிக்கிக் கொள்வதால் துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் உண்டாக்கும் பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற, செயல்புரியும் நுரை ஆழ ஊடுருவிச் சென்று உபாதை தரும் உணவுத் துணுக்குகளையும் பாக்டீரியாக்களையும் அகற்றி விடுகிறது.



பயன்: சுவர்ச்சிமிக்க வெண்மையான பற்கள், தன்னம்பிக்கை தரும் இனிய சுவாசம், பற்சிதைவுக்கெதிராகப் பாதுகாப்பு.

## கோல்கேட் டென்டல் க்ரீம்

**உபயோகித்து வாய்துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்**




DC-G-74 TM






எம்.ஜி.ஆர். தானும் பாதயாத்திரை
செல்லப் போவதாக அறிவித்துள்ளார்!



# ஏமாற்றம் 1

தஞ்சாவூரில் குடியரசு தினத்தன்று அப்பாவி தேசபக்தர் கிருஷ்ணன் தேசியக்கொடி ஒன்று வாங்க எண்ணிக் கடைகடையாக ஏறி இறங்கி ஏமாற்றமடைந்திருக்கிறார். ''எந்தக் கட்சிக் கொடியை வேணுமானாலும் கேளுங்கள், தருகிறோம்; தேசியக் கொடியை யார் வாங்குகிறார்கள்?'' என்று கடைக்காரர்கள் கேட்டனராம்! அவர்களைக் குறை கூறுவதற்கில்லை. எது வியாபாரமாகுமோ அதைக் கடை பரப்புகிறார்கள். தேசபக்தர் கிருஷ்ணன்தான் பாவம், இன்னும் 47, 48 க்களிலேயே இருக்கிறார்! தேசிய உணர்வை சுயநலம் தனக்கு இரையாக்கிக் கொண்டு ஜீரணித்து ஏப்பம் விட்டு ரொம்ப நாளாகி விட்டதே!

குடியரசு தினத்தன்றும் சுதந்திரதினத்தன்றும் டில்லி செங்கோட்டையிலும் இதர அரசு அலுவலகங்களிலும் கொடி ஏற்றப்படுவது கூட ஒரு சடங்குதானே யொழிய தேசபக்தியினால் நடப்பது அல்ல. இன்று தேசப்பற்று தலைவர்களுக்கும் இல்லை; அதை அவர்கள் மக்களுக்கு ஊட்டி வளர்ப்பதும் இல்லை. மிகப் பெரும்பாலான தலைவர்கள் மானசீகமாக சுயநலக் கொடியைப் பட்டொளி வீசிப் பறக்கவிட்டுக் கொண்டிருக்கிறார்கள்!

# ஏமாற்றம் 2

மேலும் ஒரு ரயில் விபத்து; தொடர்ந்து அனுதாபச் செய்திகள்; மீண்டும் நஷ்ட ஈடு; மறுபடி விசாரணை. சில நாட்களுக்குப் பரபரப்பு; பின்னர் வழக்கமான மெத்தனம், அலட்சியம், அசுவாரஸ்யம் — அடுத்த விபத்து நிகழும்வரை!

ஆட்சியிலுள்ளோரின் சுயநலமும் பொய்மையும் மக்களிடையே தேசபக்தியை வேகமாய் அழிந்து வருகிறது என்பதற்கு அடிக்கடி நிகழும் ரயில் விபத்துக்களே போதிய எடுத்துக்காட்டு. தெய்வபக்தியும் தேசபக்தியும் உள்ளத்தில் பொங்கினால்தான் கடமையுணர்வும் உழைப்பார்வமும் செய்நேர்த்தியும் பிறக்கும். இன்று ரயில்வேயில் மட்டுமின்றி எல்லாத்துறைகளிலுமே அதிகம் வளர்ந்திருப்பது ஏனோதானோ மனப்பான்மைதான். ஆனால் ரயில்வேயில் நிலவும் அசிரத்தைதான் நம்மை அதிகமாகப் பாதிக்கிறது. மற்ற துறைகளில் பொருள் நஷ்டம்தான் ஏற்படுமே தவிர மனித உயிர்கள் நஷ்டமாக வாய்ப்பில்லையல்லவா? பெரும்பாலான ரயில் விபத்துக்களுக்கு ஊழியர்களின் கவனக்குறைவே காரணம் எனத் தெரியவந்திருப்பது இந்தப் பரிதாப நிலையை அடிக்கோடிட்டுக் காட்டுகிறது.

# ஏமாற்றம் 3

நமது நிருபருக்குச் சிறப்புப்பேட்டி அளித்த வாஜ்பாயீ சுதந்திரத்தொழில், சுதந்திரப் பொருளாதாரம் என்பன மாயை என்கிறார். மேற்கு ஜெர்மனியும் ஜப்பானும் ஏன், அண்மைக்காலத்தில் மலேசியாவும் சமீபத்தில்தான் விடுதலை பெற்ற சில ஆப்பிரிக்க நாடுகளும் அடைந்துள்ள முன்னேற்றங்கள் மாயையா?

சுதந்திரத் தொழில் — பொருளாதாரத்தைத் தொழிலதிபர்களே விரும்பவில்லை என்கிறார் வாஜ்பாயீ. இதில் வியக்க ஒன்றுமில்லை. பெர்மிட் லைசென்ஸ் ஆட்சியின் அனுகூலங்களை அறிந்துள்ள நமது பணமுதலைகள் அப்படித்தான் சொல்வார்கள்! பர்மிட் லைசென்ஸ் ஆட்சியில்தான் பணக்காரர்கள் மேலும் செல்வத்தில் கொழுக்கவும் ஏழைகள் மேலும் வறுமையில் வாடவும் வாய்ப்புண்டு.

பொருளாதார அதிகாரங்களை மத்தியில் குவிக்காமல் பரவலாக்கவேண்டும் (de centralize) என்கிறார் வாஜ்பாயீ. இதனால் லஞ்ச ஊழல்கள் மையத்தில் குவியாமல் பரவலாக்கப்படுவது ஒன்றுதான் நிகர லாபமாயிருக்கும்.

கழுத்தை நெரிக்கும் போட்டா போட்டி கூடாது என்கிறார் வாஜ்பாயீ. இந்தப் போட்டாபோட்டியினால் பலன் அடையப்போகிறவர்கள் பண்டங்களை வாங்கும் பொதுமக்கள்தான் என்னும்போது ஏன் அது இருக்கக் கூடாது?

சிறுதொழில்களுக்கு ஊக்கம் தரவேண்டும் என்கிறார் வாஜ்பாயீ. ரொம்ப சரி. ஆனால் இன்று தொடங்கும் சிறுதொழில், என்றும் சிறுதொழிலாகவே இருந்துவிடாமல் பெரிதாய் வளர ஏற்ற சூழலை உருவாக்கும் சுதந்திரப் பொருளாதாரமும் அனுகூலமான வரிவிதிப்புக் கொள்கையும் தாம் வேலை வாய்ப்புக்களை ஏராளமாய்ப் பெருக்கி மக்களின் துயர் துடைக்கும்.

1982 பிரப்வரி 7
துன்மதி தை 25
மலர்: 40
இதழ்: 28





கல்கி

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

# 4

பகல் உணவுக்குப் பின் படுக்கை மீது புத்தகத்துடன் சாய்ந்த சந்தியா தன்னையும் மீறி உறங்கிப் போனாள்.

தடபுடா என்று சத்தம் கேட்டுத் திடுக்கிட்டு விழித்துக் கொண்டு எழுந்தாள். பின் தாழ்வாரத்தின் ஓரத்திலிருந்த ஆட்டுக்கல்லில் அடுத்த நாள் தயாரிப்புக்கு வேண்டி இட்



டிலிக்கு மாவு அரைத்துக் கொண்டிருந்தாள் ஜகதா.

முகம் சிவக்க, நெற்றியில் வியர்வை பொடிக்க அந்தப் பெரிய குழவியை வேகமாகச் சுழற்றிக் கொண்டு அவள் பாடுபடுவதைக் கண்டு சந்தியா பரிதாபமடைந்தாள்.

''அத்தை! நீங்க இனிமேல் இந்த மாதிரி கடினமான வேலைகளையெல்லாம் செய்யக்கூடாதுன்னு சொல்லியிருக்கேன். என்னை எழுப்பறதுக்கு என்ன?'' என்றுஉரிமையோடு அதட்டினாள்.

''நீ மட்டும் என்னவாம்? காலையில் பஸ் பிடிக்க ஓடி — நாள் முழுவதும் பள்ளிக் கூடத்திலே தொண்டைகாயப் பாடம் கத்துக் குடுத்துட்டு வீட்டுக்கு வந்து தோட்ட வேலையிலும் எனக்கு உதவி செய்யறே. ராத்திரி வெகு நேரம் முழிச்சிக்கிட்டிருந்து மறுநாள் கத்துக் குடுக்கவேண்டிய பாடங்களுக்குக் குறிப்பெடுக்கறே. நீயுந்தான் கடினமாவேலை செய்யறே.''

''உங்க வயசு என்ன? என் வயசு என்ன? நகருங்க. நான் அரைச்சுக் கொடுக்கறேன்.'' அவள் அதட்டியபோது அத்தையம்மாள் கையைக் குறுக்கே நீட்டினாள்.

''ஆச்சு! இன்னும் ரெண்டு சுத்து. உளுந்து மசிஞ்சு போயிடும். உப்புப் போட்டுமாவைக் கலந்து வைச்சுட்டு ஆட்டுக் கல்லைக் கழுவி விட்டு வரதுக்குள்ளே நீ எனக்குச் சூடா காப்பி போட்டு வை போறும். நம்ப செல்லக்குட்டி சுத்தமா மரத்துப் போனதிலே கடைத் தெரு வீரம்மா கிட்டக் கொஞ்சம் கைப்பால் வாங்கிக்கிறேன் இல்லையா... நீ தூங்கிட்டு இருந்தப்போ அவ கொண்டு வந்ததை லோட்டாவிலேயே கொட்டி அடுப்பு மேடையிலே ஒரு பக்கம் வச்சிருக்கேன். போ. முதல்லே மூஞ்சியைக் கழுவிப் பொட்டு வெச்சுக்கோ. சம்பங்கிப் பூவை நாவில் கோத்து வாழை இலையிலே சுருட்டித்தண்ணி தெளிச்சு மேஜை மேலே வெச்சிருக்கேன். தலையை வாரிப் பின்னி அதை வெச்சுக்கோ. இந்தக் கிழிஞ்சுபோன வாயில் சேலையை அவிழ்த்துட்டுஅலமாரியிலே பொட்டி போட்டு வச்சிருக்கிறதிலே நல்லதா ஒண்ணு எடுத்துக் கட்டிக்கிட்டுப் பளிச்சினு இரு.''

''முதல்லே காப்பி வேணுமா? அல்லது நான் அலங்காரம் செய்துக் கணுமா?'' — சிரித்தாள் சந்தியா

''படிச்சிருக்கே.. பார்க்கப் பளிச்சுனு இருக்கே. ஆனால் இந்தப் பாவிப் பயல்கள் பணம் இல்லாம எவனும் கட்டிக்க முன்வர மாட்டேன்கிறானுகளே-'' அத்தை முணுமுணுத்தபடி கோபத்துடன் குழவியை ஆட்டினாள்.

''ஆரம்பிச்சுட்டீங்களா! அது தான் முடிவான



# சாதாரண மனிதன்

'லக்ஷ்மி'

தீர்மானமாயிடுச்சே. நான் வரதட்சிணை கொடுத்து எவனையும் கட்டிக்கப்போறதில்லே. என்னை எனக்காக விரும்புகிறவனைத்தான் கல்யாணம் செய்துக்கப் போறேன்னு எத்தனை வாட்டி சொல்வது?''

''விளையாட்டுத்தனமாப் பேசறே. அது நடக்கிற காரியமா? எனக்கு வயது என்ன ஆவுது? நான் உன்னுட்டம் சின்னப் பொண்ணு இருக்கச்சே என் அப்பா வர தட்சணை கொடுக்க மாட்டேன்னு வீம்பு பிடிச்சார். முடிவில் என்னாச்சு? வாழைக் கொல்லையை அழிவிலைக்கு வித்து அவங்க கையிலே கொட்டிக் கொடுத்துக் கல்யாண மாச்சு. கொஞ்ச நாளிலேயே அண்ணனுக்குப் பாரமா நான் வெறும் நெத்தியோட வீடு திரும்பி வந்துட்டேன். உங்க அக்கா மார்களையும் சும்மா கட்டிக் குடுக்க முடிஞ்சுதா? பெரிய மாப்பிள்ளை கணேசனாவது கொடுத்ததை வாங்கிகிட்டுப் போனார். இந்தக் குமரேசன் வீட்டு மனுஷங்க செய்த கலாட்டாவைக் கொஞ்சமா மறக்கமுடியும்?''

''குமரேசன் அத்தான் குடும்பமே ஒரு பொல்லாத கூட்டம். என்ன செய்வது? அத்தை — அவுங்க நமக்கு உறவுக்காரங்களா அமைஞ்சுட்டாங்களே?'' — பெருமூச்செறிந்தபடி குளியலறைக்குள் ஓடினாள்.

அத்தை சீராக மடித்து வைத்திருந்த நூல் சேலையை உடுத்திக் கொண்டு தலையை வாரிப் பின்னிவிட்டு, பூ முடித்துக்கொண்டு தன் உருவத்தைக் கண்ணாடியில் ஒரு முறை பார்த்துக் கொண்டாள்.



. குபீரென்று அவன் நினைவு வர நெஞ்சம் படபடத்தது.

அன்று மாலை... அவனைப் பாராதவள் போலச் சட்டென்று கோவிலுக்குள் அர்ச்சனைத் தட்டுடன் சென்று விட்டாள்.

அபிஷேக ஆராதனை முடிந்து அனவாடீஸ்வரருக்குத் தீபாராதனை நடந்துகொண்டிருந்தது.

ஊரில் பெரிய புள்ளியான நாட்டாண்மை சிவநேசனின் திருப்பணியான வைர விபூதிப் பட்டை லிங்கத்தின் நெற்றியிலே கற்பூர ஜோதியில் ஒளி வீசிக் கொண்டிருந்தது. கோயிலுக்குள் கூட்டம் அதிகம் இருக்கவில்லை. வந்திருந்த சிலரும் கற்பூர ஜோதியை வணங்கி நகர்ந்தனர். தட்டைக் கர்ப்பக்கிரகத்துக்குள் வைத்துவிட்டு நழுவிய தோள் துண்டைச் சரி செய்தபடி புன்னகைத்தபடி வெளிவந்தார் அர்ச்சகர்.

''சந்தியா அம்மா! உங்க வீட்டுக்கு நான் வரவேண்டிய வேலை மிச்சமாயிடுச்சு. கோயில் உபயோகத்துக்குப் போக மீதி அத்தனை எலுமிச்சம் பழத்தையும் தர்மகர்த்தா பூதலூர் மார்க்கெட்காரர் ஒருத்தருக்கு மொத்த விலைக்குத் தந்துவிட்டார். அந்தத் தொகையை உங்க டொனேஷனாக ஒரு ரசீது போட்டுக் கொடுத்திருக்கிறார். இந்தாங்க.'' சொல்லியபடி தம் இடுப்பிலிருந்த விபூதி சம்புடத்தைத் திறந்து உள்ளே மடித்து வைத்திருந்த காகிதத் துண்டை அவளிடம் நீட்டினார்.

''ஆமாம்! அர்ச்சனை யார் பேருக்கு?'' என்று கேட்டுக் கொண்டே தட்டை அவளிடமிருந்து வாங்கிக் கொண்டார்.

''ஸ்வாமி பேருக்குப் பண்ணுங்கோ...'' மெல்லிய குரலில் சந்தியா பதிலளித்தாள்.

''போன தடவை உங்க அத்தை வந்திருந்தப்போ ஒரு புது தினுசு மல்லிகைப் பூவை மாலை கட்டி எடுத்துண்டு வந்திருந்தாங்க. உங்க தோட்டத்திலே பூத்ததாம். ரொம்ப வாசனையா இருந்தது.. மல்லிகையிலே இருபது வகைக்கு மேலே இருக்கு. இது பேர் என்னன்னு கேட்டேன். காம பாணம் அப்படின்னாங்க. இந்த மாலையை அம்பாளுக்குப் போட்டுடுவோம். ஒருதடவை ஈசுவரன் விட்டக் காமன் பட்ட பாடு போறுதான்னேன். அத்தையம்மா அன்னிக்கு ரொம்பவே சிரிச்சுட்டாங்க. ஆமாம் சந்தியா அம்மா.. நீங்க என்ன பூ கொண்டு வந்திருக்கேள்?''

''ரோஜாப்பூ'' — சொல்லிவிட்டு நிமிர்ந்தாள். எதிர்ப் பக்கம் கம்பி மீது சாய்ந்தபடி கண் கொட்டாது அவளையே பார்த்துக் கொண்டு ஸ்ரீதரன் நிற்பதை உணர்ந்து திடுக்கிட்டு வெட்கி முகம் சிவந்து போனாள்.

''டாக்டர் ஸாருக்கும் அர்ச்சனை பண்ணணுமா? யார் பேருக்கு?'' அர்ச்சகர் அவன் பக்கம் கையை நீட்டித் தேங்காய் பழக் கூடையை வாங்கிக் கொண்டார்.

ஸ்ரீதரன் லேசாக முறுவலித்தான். ''ஈஸ்வரன் அம்பாள் இரண்டு பேர் மேலேயும் அர்ச்சனை செய்துடுங்கோ.''

''கடைத் தெருவில் நம்ப மாணிக்கத்து பலசரக்குக் கடைக்குப் பக்கத்திலேதானே உங்க கிளினிக்கைத் திறந்திருக்கேள். கேள்

விப்பட்டேன். ரொம்ப சந்தோஷம். உங்களைப் போல் உள்ள திறமைசாலிகள் வெளி நாட்டுக்கு வாரிக் குவிக்க ஓடிப் போயிடறா. மிச்சமா இருக்கிறவா பட்டணங்களை விட்டு வரதில்லே. எங்களைப் போல ஏழை பாழைகளுக்கு வைத்தியம் செய்யத் திறமை மிக்க டாக்டர்கள் கிராமத்தைத் தேடி வரது அபூர்வம்....

''இதெல்லாம் அவரவரது கொள்கையைப் பொறுத்தது....'' ஸ்ரீதரன் மெல்லச் சிரித்தான்.

''பூதலூர்தானே ஜாகை? தினமும் பஸ்ஸிலே வந்து போறேளா?''

''மோட்டார் சைக்கிள் வைத்துக்கொண்டிருக்கிறேன். அதிலே வந்து போகிறேன்.''

''கவலைப்படாதேங்க. டாக்டருக்குப் படிச்சிருக்கேள். கையில் பெரிய தொழில் இருக்கு. லட்சத்தை முடிஞ்சுண்டு க்யூவிலே வரளைப் பெத்தவா வரதட்சிணையோடு காத்திருப்பா. அப்புறம் கார் பங்களான்னு வசதியா வாழ்க்கை வந்து சேர்ந்துடும். உங்கம்மா அப்பா மெட்ராஸிலேயே இருக்காப்பலேயா? அம்மாவையாவது சமைச்சுப் போட அழைச்சு வச்சுக்கலாமே?''

''அவங்க ரெண்டு பேரும் இந்த உலகத்திலேயே இல்லே.''

''சிவ! சிவ! நான் கேட்டதே தப்பாப் போச்சு. உங்க கூடப் பொறந்தவா அண்ணா தம்பி, தங்கை இதுகள் இருக்குமே.''

''என் அக்காதான் தாயைப் போல் வளர்த்து ஆளாக்கினவங்க. அவங்க விதவையாகிவிட்டதும் தம் ஒரே மகனோட பம்பாயில் வசிக்கிறாங்க.''

அதற்கு மேல் பேசாது அவர் அர்ச்சனைகளைக் கவனித்தார், இரு சந்நிதிகளிலும்.

அலயாம்பிகை வைர மூக்குத்தி, காசு மாலை, ஒட்டியாணம் என்ற அலங்காரத்தில் அருள் பாலித்துக் கொண்டு நின்றாள்.

அம்பிகைக்கு அர்ச்சனை செய்துவிட்டுப் பிரசாதக் கூடையுடன் வெளி வந்த அர்ச்சகர் அதிகம் பேசவில்லை.

முன் மண்டபத்தைத் தாண்டி வெளியூர்வாசிகள் ஒரு பெரும் கூட்டமாக உள்ளே நுழையவே அவர் கவனம் அவர்கள் பக்கம் சென்று விட்டது.

கோபுர வாசலை விட்டு வெளியே வந்தான் அவன்.

''மிஸ் சந்தியா!''

பின்னாலிருந்து வந்த குரலைக் கேட்டுத் திகைத்து நின்றாள்.

''மயக்கமா விழுந்த உங்க மாணவி இப்ப சுகந்தானே?'' மென்மையாக முறுவலித்தான்.

தலையை அசைத்தாள். — நெஞ்சிலே ஏற்பட்ட இன்பச் சிலிர்ப்பில் துணிவுடன் நிமிர்ந்து பார்த்தாள்.

''உங்களுடைய ஆலோசனைப்படி வகுப்பு துவங்கு முன் தினமும் அந்தக் கருத்தை மாணவிகளுக்குப் போதிச்சுட்டு வரேன்.''

மெலிதாகச் சிரித்து விட்டாள். அவனும் கூடச் சிரித்தான்.

ஆயிரம் காலம் பழகிய இருவர் சிரிப்பிலே கலந்தது போல் அவள் மனத்தில் எத்தனை ஒரு நிறைவு!

**அ**த்தையின் காலடி ஓசை கேட்டதும் விழித்துக் கொண்டு சமையலறைக்கு ஓடினாள். காப்பியைக் கலந்து கொண்டு வந்து கொடுத்துவிட்டுத் தானும் சாப்பிட்டு டம்ளரைக் கழுவ முற்றத்தில் இறங்கியபோது வீட்டுக் கதவு பலமாக இடிபட்டது.

'இந்த வேளை பார்த்து யார் வந்திருக்கிறது?'' — அத்தை முணுமுணுத்தபடியே கதவைத் திறந்தாள். மிகவும் களைத்துப் போனவர்கள் போலக் காணப்பட்ட நடுத்தர வயதைத் தாண்டிவிட்ட ஒரு மனிதர் அவர் பின் முகத்தை நிறைத்த குங்குமப் பொட்டுடன் ஏறக் குறைய அதே வயதில் ஒரு பெண்மணி நின்றிருந்தனர்.

''சேலத்திலிருந்து வரோம். பஸ்ஸிலிருந்து இப்பத்தான் இறங்கி வந்தோம். வழி தெரியாமச் சுத்தி.. பிறகு கடைத் தெருவில் விசாரிச்சுக் கொண்டு வரோம்.'' பெருமூச்செறிந்தார் அந்த மனிதர்.

ஜகதா விழித்தாள். ''உள்ளே வாங்கோ. உட்காருங்க.'' ஊஞ்சலைக் காட்டி உபசரித்தாள்.

''பெரிய வாத்தியார் வீடு இதுதானே? அவர் மருமகன் குமரேசனும் என் மருமகனும் ரொம்பச் சினேகிதர்கள். அவர் சொல்லித்தான் வந்தோம். இன்னிக்கு நாள் நல்லா இருப்பதாலே புறப்பட்டு வந்தோம். இந்த வெய்யில்லே பஸ் நின்னு நின்னு ரொம்ப அலட்டிடுச்சு. தாகம் நாக்கை வரட்டுது.... உஸ்...அப்பாடா...'' என்று மேல் துண்டை முகத்தின் மீது விசிறிக் கொண்டார்.

"உட்காருங்க. தண்ணி கொண்டு வரச் சொல்றேன்.... நல்ல வெய்யில்லே புறப்பட்டு வந்திருக்கிறீங்க...." மீண்டும் உபசரித்த ஜகதா சந்தியாவுக்குக் கண்களால் ஜாடை செய்துவிட்டு மின் விசிறியைச் சுழல விட்டாள்.

சந்தியா சமையலறை மேடையிலிருந்த நீர்க் குடத்தைச் சரித்து ஒரு வெண்கலச் செம்பில் நிறைத்துத் தம்ளருடன் எடுத்துக் கொண்டு வந்தாள்.

ஊஞ்சலில் லேசாக ஆடியபடி தண்ணீரைத் தம்ளரில் ஊற்றி ஒரே மூச்சாகக் குடித்த அந்த மனிதர் "இந்தா... நீயும் சாப்பிடு" என்று மனைவியிடம் செம்பை நீட்டிவிட்டு சந்தியாவை ஏற இறங்கப் பார்த்தார்.

"இந்த வீடு, இந்தத் தோட்டம் எல்லாம் இந்தப் பெண்ணுக்குச் சொந்தம்னு குமரேசன் சொன்னார்..." என்று ஆரம்பித்தார்.

"ஒரு பொல்லாத நாய் இருக்கு பத்திரம்னு பயமுறுத்தி வச்சார். அதான் பின்னாலே அப்படிக் குரைக்குதோ?" – அத்தை அருகே சுவர் ஓரமாகப் பணிவுடன் நின்ற அந்த அம்மாள் கேட்டாள்.

"மாடு வச்சிருக்கீங்கன்னு சொன்னார். மாடு இருக்கிறது ரொம்ப நல்லது. பாலும் கிடைக்கும். சாணத்தை வீணாக்காம ஒரு சின்ன காஸ் யூனிட் கட்டி வச்சுட்டா நாமே காஸ் தயாரிச்சுக்கலாம். வீட்டுப் பெண்களுக்குச் சமையல் வேலை சுளுவாயிடும்..." சிரித்தார். அவர்.

இந்த விவரம் எல்லாம் இவரிடம் யார் கேட்டா? இவர் வந்த விஷயம் என்னவாம்? தன்னுள் பொங்கிப் போனாள் சந்தியா.

"இப்போ மாடு எவ்வளவு உத்தேசமாக் கறக்கிறது?" அந்தம்மாள் தன் மாட்டுப் பற்களைக் காட்டிக் கேட்டபோது அவளால் பேசாதிருக்க முடியவில்லை.

"உப்பிரி பிளாங்கான்னு நினைச்சா நீங்க அந்தப் பசுவைத் தேடிக்கிட்டு குஜூபாவுக்குப் போகணும். அதுதான் நாளைக்கு நாத்தஞ்சு லிட்டருக்கு மேலே கறக்கிறதாம். எங்க செல்லக்குட்டி மரத்துப் போறதுக்கு முன்னாடி நாளைக்கு மூணுலிட்டர்தான் கறக்கும்." விஷமமாகச் சிரித்தாள் சந்தியா.

ஊஞ்சலில் உட்கார்ந்து கொண்டிருந்த அந்த மனிதர் ஹோ... ஹோ... என்று உரத்த குரலில் சிரித்தார்.

"குமரேசன் சொன்னார் – என் மைத்துனி ரொம்பப் பேசும். தமாஷா பேசும்... வாத்தியார் வேலை பார்க்கறதால வேடிக்கையாப் பேசி வழக்கம்னார். ரொம்பவே சரியா இருக்கு...."

"அப்போ நாங்க வரோம். சம்பிரதாயப்படி குமரேசனைக் கலந்துக்கிட்டு மத்ததைக் கவனிப்போம்."

ஜகதாவும் சந்தியாவும் திடுக்கிட்டுப் போனார்கள்.

"வீட்டைச் சுத்திப் பார்க்கலையே. அதுக்குள்ளே எப்படி முடிவு செய்யறது?"– அத்தையம்மாள் கேட்டாள்.

"பெண்ணைப் புடிச்சுப் போச்சு. என் மகனைக் கூட்டி வந்து காட்டணும். அவ்வளவுதான். என் மகன் பி.ஏ. வரை படிச்சிருக்கான். விவசாயத்திலே ரொம்ப ஆசை. வீட்டை வச்சுக்கிட்டுத் தோட்டத்திலே பயிர் பண்ணிக்கிடலாம். குடும்பத்துக்குத் துணையாக இருக்கும். வரதட்சிணை கேட்காதீங்கன்னு குமரேசன் சொன்னார்."

சந்தியா காரமாக ஏதும் பேசும் முன் அத்தை முந்திக் கொண்டாள்.

"வந்ததுக்கு ரொம்ப சந்தோஷம். உங்க முகவரியை இந்தக் காகிதத்தில் குறிச்சு வச்சுட்டுப் போங்க. கடிதம் போடறோம். ஏன்னா ஏற்கனவே ஒரு வீட்டிலே வந்து பெண்ணைப் பார்த்துக் கிட்டத்தட்ட முடிவு வரை வந்திருக்கு. அதனாலே..." மேலே பேசாது அலமாரியிலிருந்து ஒரு காகிதத்தையும் பென்சிலையும் எடுத்து ஊஞ்சல் மீது வைத்தாள்.

அந்த மனிதனின் முகம் கடுமையாகியது. வேகமாகப் பேனாவால் தம் முகவரியைக் கிறுக்கிவிட்டு எழுந்தார். "குமரேசன் இதைச் சொல்லியிருந்தால் நாங்க இத்தனை தூரம் சிரமப்பட்டுவந்திருக்கமாட்டோம். வரோம்" கோபமாக நடையைக் கட்டினார். விடைபெற்றுக் கொண்டு அந்த அம்மாளும் புறப்பட்டாள். கேட் மூடப்பட்டதும் ஸாம்சன் குரைப்பது அடங்கியது. ஆனால் சந்தியாவின் கோபம் அடங்கவில்லை.

"வீட்டை விற்கமுடியவில்லை. மாட்டையும் விற்க முடியவில்லை. ஒட்டுமொத்தமாக இவளையே வித்துவிட்டா என்னன்னு குமரேசன் அத்தான் வீட்டுப் புரோக்கர் வேலையிலிருந்து கல்யாணத் தரகர் ஆயிட்டார்.... அத்தை இவரை நான் சும்மா விடப் போவதில்லை. ஒரு பெண் தனியாக வாழ நினைத்தால் இப்படியெல்லாம் உறவுக்காரங்களே இடையூறு பண்ணணுமா?"–ஆத்திரத்தில் பேசியவளுக்கு அழுகை பொங்கிக் கண்ணீராகக் கன்னங்களில் உருண்டன. (தொடரும்)

**மேலட்டையில் அச்சேறியிருப்பவர் குமாரி ராஜேஸ்வரி**

தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் மற்றும் இந்தி மொழிகள் இவர் நாவில் நடனம் புரிய, இவருடைய இல்லம் பல்வகை நடனங்களுக்காக இவர் பெற்ற பரிசுகளால் நிறைக்கப் பட்டிருக்கிறது. போதாக்குறைக்கு இவரது தூரிகை அண்மையில் நடந்த ஓர் ஓவியக் கண்காட்சியில் முதல் பரிசைத் தட்டிக் கொண்டு வந்துள்ளது!

வண்ணப்படம்: சரஸ்வதி சத்தியமூர்த்தி
பேட்டி: யெம்ஜி



புதிய

கோல்கேட் ஃப்ளோரிகார்ட் டூத்பேஸ்ட்






ஃப்ளோரிகார்டில் உள்ள எம்

எஃப்பி ஃப்ளோரைட் எனுமேலுடன் இணைந்து துவாரங்களுக்கும், சிதைவுக்கும் எதிராக உங்கள் பற்களை உறுதிப்படுத்துகிறது.

தமிழ்நாடு, கேரள மாநிலங்களிலும், கர்நாடகத்தில் குறிப்பிட்ட சில மார்க்கெட்டுகளிலும் இப்போது கிடைக்கும்.

CFT.G.3 TM

# நடப்பவை அனைத்தும் நல்லதேயா?

**வின்ஸ்டன் ஜி. கிருபாகரன்**



**பா**புவின் பார்வை அவளையே தொடர்ந்தது.

என்ன ஒயிலான நடை... கொள்ளை அழகு. அள்ளிக்கொள்ளலாம்போலிருந்தது. கள்ளமற்ற உள்ளத்தைக் காட்டும் முகம். இருபதின் வளைவுகளை இயற்கை சிறப்பாகச் செதுக்கியிருந்தது.

தோள் பை புடைத்திருக்க, இடதுகையில் வட்டமான பாக்கெட்டுகள்... அப்பளம். வீட்டுத் தயாரிப்பு. அதுதான் தொழில். பிச்சை எடுக்கவில்லை. பிறத்தியாரிடம் பச்சையாகப் பல்லிளிக்கவில்லை. கௌரவம் கொப்பளித்தது தொழிலில்.

ஆயினும் சிறக்கவில்லை.

பாபு பல நாட்களாகப் பார்த்துக்கொண்டிருக்கிறான். உதவ வேண்டும் என்று ஆசைதான். எப்படி என்றுதான் புரியவில்லை. வீடு வீடாகத் தினமும் ஏறி இறங்குவதும் அதே சுமையைத் தோளில் சுமந்து கோடி வரை போவதும் வாடிக்கை. அதற்கப்புறம் தெரிய மாட்டாள்.

இவள் சொல்வது அவர்களுக்குப் புரியவில்லை. அவர்கள் கேட்பது இவளுக்கு விளங்குவதில்லை.

தொழில் எங்கிருந்து விளங்கும்?

செவிட்டு ஊமை அவள்.

கண்டமானத்துக்கு கையை ஆட்டி ''இது எதிலே செய்தது?'' என்று கேட்டால் ''எங்க வீட்டிலே செய்தது'' என்று சைகையில் பதிலளிக்கிறாள் பாவம்.

உருப்பட்டாற்போலத்தான். கூடப் பேசிக்கிட்டு நிற்க என்னாலாகாதும்மா. யம்மா தாயே ஆளை விடு'' என்று வீட்டுக்கார அம்மாள் கும்பிட்டு விடை கொடுத்ததும் கிளம்பி விடுவாள். சங்கோஜம் வெட்கம் நிற்க விடாமல் தடுக்கும். 'கும்பிடுகிறார்களே... தோரணையில் வெறுப்பு இருந்ததே... நான் என்ன சொல்லி விட்டேன்' என்று நினைப்பாள். உள்ளம் வியர்க்கும். கண்கள் கலங்கும்.

சம வயதுப் பையன்கள் ''பையிலே என்ன இருக்கு? அதே சைஸ்தானா?'' என்று கேட்டுச் சட்டென்று உள்ளே கையை விடுவது போல் உரச முற்படும்போது லாகவமாக ஒதுங்கி விடுவாள்.

முறைப்பு வராது. என்ன செய்ய? தொழில் அப்படி. நாலு விதமாய்... வித்தியாசமானவர்களை அவள் சந்தித்தே ஆக வேண்டும். பாபு நினைத்தான். கண்டும் அழகைக் கொடுத்த ஆண்டவன் ஏன் இப்படி ஒரு முள்ளை வைத்தான்?'

'நான் பலசாலியாக இருக்க விரும்பினேன். ஆனால் ஆண்டவன் என்னை முடமாக்கினான்....இருக்கட்டுமே! இன்று நான் கொலைகாரனில்லை' என்று மனத்தைத் தேற்றிக்கொள்ள வேண்டுமாம்! சரி.

இவள் எப்படித் தன்னைத் தேற்றிக்கொள்வாள்? 'நீயவை கேட்காமல், நீயவைபேசாமல் இருக்கக் கருணை புரிந்த தெய்வமே: உனக்கு நன்றி!' என்றா?

அந்த வயதில் அது முடியுமா?

அவளுக்கு உதவ வேண்டும்.

எந்த வகையில்?

பார்ப்போம்....

**யா**ர் இவள்?

எங்கிருக்கிறாள்?

பின்னால் சென்று பார்ப்போமா? — வேண்டாம். நாகரீகமாகாது.

கேட்டுத் தெரிந்து கொண்டால்? வேண்டாம். ஒன்று கிடக்க ஒன்றாகப் பொருள்படுமேயானால் நைந்து போவாள்.

மஞ்சள் கயிறோ, மெட்டியோ இல்லை. அன்றாடத் தேவைகளுக்கு அப்பளம் விற்கிறாள். அப்படியானால் குடும்பத்தைப் பராமரிக்க, சம்பாதித்துப் போட ஆண் துணை இல்லையென்றுதான் அர்த்தம்.

அவளுக்கு உதவ வேண்டும்.

வெறும் பரிவும் பச்சாதாபமும் அவளது குறையைப் பெரிது படுத்தி விசுவரூபம் எடுத்துத் தாழ்வு மனப்பான்மை தலைதூக்கத் துணை போகுமேயன்றி நிரந்தர நன்மைக்கு வழிகோலாது.

பின் எப்படி?

எதற்கெடுத்தாலும் கண் கலங்குகிறாளே, முதலில் அதற்கு அணை போட வேண்டும். புதிய தெம்போடு, புதிய பொலிவோடு, தானும் உயர்ந்து, தன்னாலும் பிறத்தியாருக்கு உதவியாக இருக்க முடியும் என்ற மனப்பான்மை உருவாகவழிவகுத்துத்தரவேண்டும்.

அதுதான் சரி.

ஊனம் பற்றிய சான்றிதழை மருத்துவரிடம் வாங்கி குறிப்பிட்ட படிவத்தை நிரப்பி சட்ட மன்ற உறுப்பினரிடம் கையெழுத்துப்

பெற்று, மாவட்ட ஆட்சித் தலைவருக்குச் சமர்ப்பித்தால் உதவித் தொகை கிடைக்கும். அப்பளத் தொழிலை விரிவுபடுத்த வங்கியில் கடன் வசதி பெற வாய்ப்புக்கள் பெருகும். முன்னேற்றத்துக்கான முதற்படி.

ம்ஹூம்... சரிப்படாது. முதற்கட்ட சான்றிதழை வாங்கவே மாதக் கணக்கில் அலைய வேண்டி யிருக்கும்.

சில மாதங்களுக்கு முன் மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டிருந்த நண்பனைக் காணச் சென்றிருந்தபோது அவன் கூறியவை நினைவுக்கு வந்தன.

''பெட் நம்பர் பதிமூணைப் பாரேன்... பாவம். மூணு நாளாப் பார்த்துக்கிட்டிருக்கேன். துணைக்கு ஒருத்தருமில்லே. மூணும் மனுஷரோட ஒத்தாசை இல்லாம, படுத்தா எழுந்திருக்க முடியாது; உட்கார்ந்தாப் படுக்க முடியாது. யூரின்-மோஷன் டைம்ல ரொம்ப அவஸ்தை. ஸ்டாஃபைக் கெஞ்சாத குறை. என்ன நோவோ தெரியலே. ஹாஸ்பிடல் சாப்பாட்டை வாங்கி வைக்கப் பாத்திரம் பண்டம் ஒண்ணும் கிடையாது. வீட்டுச் சூழ்நிலை எப்படியோ? நாங்க கொடுத்தாலும் சாப்பிடறதில்லே... பட்டினி கிடக்கிறான் மனுஷன்....

''கவர்மெண்ட் சர்வெண்டாம். சர்விஸ் கம்மியாம். டி.எம்.ஓ. இன்வாலிடேஷன் சர்டிஃபிகேட் கொடுத்தாத்தான் பென்ஷன் கிடைக்குமாம். வேடிக்கைதான். உண்மையாகவே ஒரு இன்வாலிட். ஒரு இன்வாலிடேஷன் சர்ட்டிஃபிகேட் வாங்கறதுக்கு இப்படியா சிரமப்பட வேண்டி யிருக்கு? என்ன சட்டமோ? என்ன நியாயமோ? மனிதாபிமானமே கிடையாதப்பா.''

''கம்பர்ஸம்தான்....

'நான் உண்மையாகவே செவிட்டு ஊமை. நடிப்பல்ல' என்று உலகத்துக்கு(!) எடுத்துக் காட்ட அவன் எத்தனை எத்தனை சோதனைகளை மேற்கொள்ள வேண்டி யிருக்கும்? அந்த நாட்களின் அனுபவங்கள் அவன் மனத்தில் எவ்விதமான பாதிப்புக்களை ஏற்படுத்தும்? வேண்டாம்... பாவம்... துவண்டு போவாள்.



அப்படியே சான்றிதழ் கிடைத்தாலும் அப்புறம் 'தரு ப்ராப்பர் சானல்' என்று மேலும் கீழுமாக அது அலைந்து அழுக்காகிக் கிழிவதற்குள் இவன் நாற்பதைத்தை எட்டி விடுவான்.

வேறெந்த வகையில் அவனுக்கு உடனே உடனே உதவி செய்ய முடியும்?

பார்ப்போம்....

**பா**பு செல்வந்தர் பரம்பரையில் பிறந்தவன். செல்வச் செருக்கு அவன் பெற்றோரிடம் என்றுமே காணப்பட்டதில்லை. பரந்த மனப்பான்மை கொண்டவர்கள்: ஒரே மகன் பாபுவும் அப்படித்தான்.

மேஜரான பிறகு அவனுக்குச் சகல சுதந்திரமும் அளிக்கப்பட்டிருந்தது. முன்னேற்றத்துக்கான வழியை அவன் விருப்பப்படி தேர்ந்தெடுத்துக் கொள்ள அனுமதித்திருந்தார்கள். – தலையிடுவதில்லை.

சட்டெனத் தோன்றியது அந்த எண்ணம். 'அரசையோ, அன்னியரையோ அணுகுவானேன்? பாலையில் கால்வாய் வெட்டி நீர் தெளிக்கும் முயற்சி! அவளை மனைவியாக்கிக் கொண்டால் என்ன?'

பெர்ஃபெக்ட். பிரச்னைகள் எழாது. அவள் ஒன்றும் பெண்ணடிமையாகவாழ்க்கைநடத்த வேண்டாம். அவளுக்கும் எல்லாச் சுதந்திரமும் உண்டு. பணம் இருக்கிறது. தொழில் செய்யட்டும். ஆம். அகல உழுது. அவளைப் போலொத்தோருக்கு வேலை வாய்ப்பு ஏற்படுத்தட்டும். அதில்தான் அவளுக்கு மன நிறைவு ஏற்படும். அப்போதுதான் சோகத்தின் சாயல் மறைந்து கண்ணீர் வடிவது நிற்கும்.... வரும் தையில் வைத்துக் கொள்ளலாம்.

சம்மதிப்பாளா?

பார்ப்போம்....

**பி**ன்புறமிருந்து விரிந்து வந்து கண் முன் நடனமாடிய விரல்கள் பாபுவின் தீவிர சிந்தனையைக் கலைத்தன.

திரும்பிப் பார்த்தான்.

சங்கர்... கல்லூரி நாட்களில் பழக்கம். பணக்கார வீட்டுப் பையன். கிராமம் பிடிக்காமல் வேலை தேடுகிறேனென்றுசொல்லி நகரில் வாடகைக்கு ஒரு தனி வீடு எடுத்துக் கொண்டு ஊர் சுற்றுகிறான். பெண் பித்தன்.

திருடன்: "உயிர்மேலே ஆசையிருந்தா மரியாதையா..."

நபர்: "இந்தாப்பா... வாட்ச் மோதிரம், செயின்... எடுத்துக்கிறு ஆளை விட்டுடு...!"

திருடன்: "இது யாருக்கு வேணும்? மரியாதையா அடுத்த வாரத்திலேயிருந்து பத்திரிகையிலே நீ எழுதற தொடர்கதையை நிறுத்திப்புடணும்..! தெரியுமா...?"

-ஜில்போ



ஆளானப்பட்டவளை யெல்லாம் அடக்கி ஆண்டவன் என்று பெயர் பெற்றவன்! அப்படி ஒரு காந்த சக்தி அவனிடம் இருந்தது.

"என்னபாபு...படுமான்னு பார்க்கிறியா?" என்று கண் சிமிட்டிக் கேட்டான் சங்கர்.

"எது? என்னது?" – ஒன்றும் புரியாத பாபு திருப்பிக் கேட்டான்.

"அந்த ஊமைச்சியைத்தானே ஃபாலோ பண்றே? பயப்படாதே. பட்டுடும். டாப் ஃபிகர்!" என்று மீண்டும் கண்ணடித்தான்.

பாபு அசந்து விட்டான். எத்தனை சுலபமாக அலட்சியமாகச் சொல்கிறான் இவன் என்று நினைத்தான். "சேச்சே... அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. அவளும் அந்த மாதிரிப் பெண்ணாத் தெரியலை."

"உனக்கு அனுபவம் போதாது. இந்த மாதிரி ஊனம் இருக்கிற பெண்களைத் தட்டறது ரொம்பச் சுலபம். எவனும் சீண்ட மாட்டாங்கற தாழ்வு மனப்பான்மையும், ஏழைமையும் இருக்கும்போது 'அப்ரோச்' பண்றது ஈசி. நாலு முழம் பூவையும் பத்து ஒத்தை ரூபாய் நோட்டையும் விசிறினாப் போதும். நாளெல்லாம் நாட்டியம்தான்!"

பாபுவுக்குக் கோபம் வந்தது. வெளிக்காட்டவில்லை. "பாவம்பா... ஊனத்தைச் சுட்டிக் காட்டிப் பேசாதே." என்றான்.

"உண்மையைச் சொல்றதிலே என்னப்பா தப்பு? வேணும்னு பார்.. இன்னிக்குச் சாயந்திரத்துக்குள்ளே முடிச்சுக் காட்டறேன். கல்யாண கிராக்கிக்கு 'லம்ப்பா' ஒரு நூறு கட்டு அப்பளத்துக்கு ஆர்டர் பிடிச்சுத் தர்றேன்னு சொல்லி அட்ரஸ் கொடுத்தா வீட்டு வாசல்ல வந்து நிப்பா. அப்புறம் பாரேன்... வேடிக்கைதான்!"

"நோ காண்ட்..."

"ஊஸி ஃபார் மீ."

"சேலஞ்ச்?"

"சாயந்திரம் ஆறு மணிக்கு வீட்டுக்கு வா."–கோடிவரை போய் விட்டிருந்தவளை சைக்கிளில் துரத்திப் பிடித்தான். சைகையால் வட்டமாக அப்பளத்தைக் காட்டினான். கழுத்தில் தாலி என்றான். 'டும்டும்' என்று முரசொலித்தான். விசிட்டிங் கார்டைக் கொடுத்து 'வா' என்றான். அவள் தலையசைத்தாள்.

அனைத்தையும் பார்த்துக் கொண்டிருந்த பாபுவின் உள்ளத்தில் சலனம் ஏற்பட்டது.

அவள் அப்படிப்பட்டவள்தானா?

ஆளானப்பட்டவளெல்லாம்சங்கருக்கு அடக்கம். இவளும் அடிமைப்பட்டு விடுவாளோ?

பார்ப்போம்...

**மா**லை மணி ஆறு.

பாபு உள் நுழைந்தபோது சங்கர் சாய்வு நாற்காலியில் அமர்ந்து மாலைப் பதிப்பில் ஆழ்ந்திருந்தான்.

கட்டிலின் மேல் மல்லிகை மொட்டுகள் சிதறியிருந்தன.

அருகில் இருந்த மேஜை மீது ஒரு அப்பளப் பொட்டலம் பிரிந்து கிடந்தது.

பாபுவுக்கு அதிர்ச்சி.

"சாம்பிளுக்கு ஓபன் பண்ணினது குருவே! அப்பளமா விக்கிறா ஊமைச்சி? இல்லேன்னு

ஆப்பிள் பழம் விக்கிரு! முடிச்சுட்டேன். கனை ஜோர்!'' என்றான் சங்கர்.

மேலும் அதிர்ந்து போனான் பாபு.

'சே... இப்படியும் ஒரு பிறவியா? இவ்வளவு மட்டமான, கீழ்த்தரமான கேவலமான பெண்ணையா மணக்கவிருந்தோம்? சும்மா சொல்லக் கூடாது. ஆண்டவன் ஆட்டுக்கு வாலை அளந்து வைப்பதில் நியாயமிருக்கிறது. பாபுவுக்குத் தலை சுற்றியது. வலித்தது. குமட்டல். பார்வையைத் திரை மறைத்தது. வாந்தி எடுத்தான். வலியால் துடித்தவனைக் கட்டிலில் படுக்க வைத்தான் சங்கர்.

ஏன்? என்னவாயிற்று!

பார்ப்போம்....

**வா**சலில் வந்து நின்றது உண்மை. சாம் பிளுக்காக ஒரு அப்பளப் பொட்டலம் பிரிக்கப்பட்டது உண்மை. சங்கர் மல்லிகைச் சரத்தை நீட்டியது உண்மை. கதவைத் தாழிடமுற்பட்டதும் உண்மை....முறைப்படி வராதவனுக்கு அவனுடைய தீவிரம் பீதி மூட்ட, நாகமாய்ச் சீறி முகத்தில் துப்பி விட்டுப் புயலென அவள் வெளியேறியது மறைக்கப்பட்ட உண்மை.

தோல்வியை ஒப்புக்கொண்டால் சிறுமைப் படுத்தப்பட்டவனுக்கு மேலும் அவமானமாம். அடித்து விட்டேன்; முடித்துவிட்டேன் என்று பொய்.

இதில் என்ன பெருமை சேரப் போகிறது அவனுக்கு?

அந்தச் செய்கையின் பின்னணியில் என்ன பொருள் புதைந்திருக்கிறது?

வளமான வாழ்வு' பறிக்கப்பட்டதுதானே மிச்சம் ஐயா... கத்தரித்து விட்டானே படுபாவி!

நடப்பவை எல்லாம் நல்லதுக்குத்தானுமே நிஜமாகவா?

பார்ப்போம்.

**பா**புவுக்குத்தலை சுற்றும் வலியும், குமட்டலும், பார்வை மங்குவதும், வாந்தி எடுப்பதும் பல மாதங்களாகவே ஏற்படுகின்றன.

கண்ணாடி போட்டால் சரியாகி விடும் என்று நம்பிக் கொண்டிருக்கிறான். பைத்தியக்காரன்.

அவனுக்கு ப்ரைன் ட்யூமர் — மூளையில் கட்டி வளர்ந்திருக்க வேண்டும். தலையில் ஆபரேஷன் காத்திருக்கிறது. பிழைப்பது அபூர்வம். அப்படி இருந்தால்தான் சங்கரின் செய்கைக்குப் பொருள் இருக்க முடியும்.

இருக்கிற ஊனம் உறுத்துவது போதாதென்று விதவைக் கோலத்தில் நெஞ்சில் கனத்தை வேறு ஏற்றிக் கொண்டு காலம் முழுவதும் கண்ணீர் விட வேண்டுமா என்ன? வழியும் விழி நீருக்கு அணை போடத்தானே விரும்பினான் பாபு! திருமணமான சில நாட்களுக்குள்ளாகவே அவன் கதை முடிந்தால்; அணை உடைந்து வெள்ளம் கரை புரண்டு ஓடும்,

தப்பு தப்பு,

வரும் தையில் தலையைப் போடுவாரு?

நம்புவோம்!



## இலக்கியத்தில் இறையுணர்வு

# 'என்னைக் காப்பது அரிதல்லவே'

**கீரன்**

தமிழ் மொழி இன்று நெஞ்சு நிமிர்ந்து நிற்பதற்குக் காரணமான பலருள் முதல்வர், டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள். தமிழ் தாத்தா. அப்படிச் சொன்னால்தான் நெஞ்சு இனிக்கிறது.

எத்துணை ஆராய்ச்சி!

அந்த ஆராய்ச்சியில் எத்துணை இடர்ப்பாடு.

சுவடிகளைத் தேடுவதும் அவற்றை முறைப்படுத்துவதும் எவ்வளவு கடினம் என்றும் அவற்றையொட்டி விளையக்கூடிய பிழைகளையும் அவரே கூறியுள்ளார்.

''சுவடிகளில் மூலப் பாட்டு இது. உரை இது என்று தெரியாமல் இருக்கும். ஒற்றைப் புள்ளி இரட்டைப் புள்ளி முதலிய அடையாளங்களை இரா. நச்சினார்க்கினியர் ''சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடனே என்றார் பிறரும்'' என்று எழுதிவிடுவார். அது மேற்கோள் என்பதும் இன்ன நூலிலிருந்து எடுக்கப்பட்டதென்பதும் விளங்கா. ''கொற்றுறைக் குற்றில்போல' என்று மாத்திரம் உரையில் காணப்பட்டால் என்ன செய்வது? சில உரையாசிரியர்கள் மேற்கோள்களைக் கூறி விட்டு, ஆசிரியர் பெயரைச் சொல்லாமல் நூற்பெயரை மாத்திரம் சொல்வதுண்டு. பத்துப் பாட்டுரையிலிருந்துதான் பரிபாடல் என்ற நூலை அறிந்து கொண்டேன். கனக மாலையார் இலம்பக உரையில் (சீவகசிந்தா மணி) 'கொற்றுறைக் குற்றில் போல'என்பது காணப்பட்டது. அதிலிருந்துதான் புற நானூற்றுக்கு உரை இருப்பதையறிந்தேன்.''

தமிழ்த் தாத்தா கூறியுள்ள மேலே உள்ள கருத்து அவருடைய தொண்டுக்கு ஓர் உரைகல் அல்லவா?

சில பாடல் ஆசிரியர்கள் பெயர்களே தெரிய வில்லை என்பதுடன் ஒருவர் பாடல் மற்றொருவர் பெயரால் வழங்குவதுமுண்டு என்பதை விளக்கத் தமிழ்த் தாத்தா ஒரு சுவையான பாடலையும் மேற்கோளாகக் கொடுத்து விளக்கியுள்ளார்.

தஞ்சை மாவட்டம் கவித்தலம் (இப்போது கபிஸ்தலம்) என்ற ஊரில் முத்தைய மூப்பனார் என்ற ஒருவர் இருந்தார். அவர் நண்பர் வீர சைவ வித்துவான் வேலைய்யர் என்பவர்.

ஒருநாள் மூப்பனார், வேலைய்யரிடம்,
''ஆனையும் காத்தவனே என்னைக்
காப்பது அரிதல்லவே'' என்ற
வரியைக் கடைசி வரியாக வைத்து ஒரு பாடல் எழுதக் கேட்டுக் கொண்டார்.

உடனே வேலைய்யர் சிந்தனையில் கஜேந்திரன் என்ற யானையைக் காத்த திருமாலின் கருணைச் செயல்கள் பலவும் ஒன்றன் பின் ஒன்றாக ஓடத் தொடங்கின. திருமால் ஆனையை மட்டுமா காத்தான்?

ஆய்ப்பாடியை அழிக்க வருணன் மழை பெய்வித்தபோது குன்றைக் குடையாக்கிச் சோலையைக் காத்தான்; தருமன் என்னும் நல்லானையும் காத்தான்; திரௌபதியின் தானை (ஆடை)யும் காத்தான்; தன்னை அடைந்தானை (அருச்சுனன்) காத்தான்; அகலிகை என்னும் மானையும் காத்தான்; அனுமானையும் காத்தான். இவ்வளவையும் காத்தவனுக்கு என்னைக் காப்பது ஒரு அரிய செயலா?



பக்தி (விருக்ஷத்தின்) மூலை உவது இருதயத்திலே மௌனமாக வளரட்டும். கள்ளம் கபடமற்ற மெய் பக்தியால் வடிக்கும் கண்ணீரையே அதற்கு நீராகப் பாய்ச்சு. ''உன்னன்பினல் இடையறாது உருக வரு மழை போனிரங்கும்'' கண்ணீரையே அதற்கு விட்டுவளர். பலனை எதிர்பாராதே. உள்ளத்தையும் உயிரையும் பரிபூரணமாக அதன் தொண்டிற்கு அர்ப்பணம் பண்ணு.

—பாரதியார்

'நவத்வாரம் உள்ள உடம்பில் உயிர் தங்கியிருப்பதுதான் ஆச்சரியம். வெளியேபோவது ஆச்சரியமே இல்லை' என்று ஒரு பெரியவர் பாடினுர். அம்மாதிரி உன்னை பிரிந்து வெளியிலிருந்தும் ஓயாமல் தாக்கப்பட்ட ஹிந்துமதம் செத்திருந்தால் ஆச்சரியமே இல்லை. சாகாததுதான் ஆச்சரியம்.

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராச்சாரிய ஸ்வாமிகள்



# ஆன்றோர் வாக்கு...

வேலை ஒன்றே மகிழ்ச்சி. வேலையே என்னை உயிருடன் நடமாட வைக்கிறது: வாழ்க்கையை வாழத் தகுதியுள்ளதாக்குகிறது. நான் மெக்கானிக்காகப் பணி புரிந்த போது இப்போதைவிடவும் மகிழ்ச்சியுடன் இருந்தேன்.

—ஹென்றி போர்டு

இவ்வாறு சிந்தித்த வேலய்யர் உடனே பாடினுர்:

''சோலையும் காத்து நல் வானையும் காத்துத்
துரோபதை தன்
தானையும் காத்து அடைந்தானையும் காத்து
நடத்து அகலி
மானையும் காத்துஅனு மானையும் காத்து
மடுவில் விழும்
ஆனையும் காத்தவனே! எனைக் காப்பது
அரிதல்லவே!''

கவித்தலம்தானே வேலய்யர் ஊர்! அந்த ஊர்ப் பெருமான் பெயர் கஜேந்திர வரதர்!

தினமும் அவரால் தொழப்படும் திருமால் அவர் கற்பனையை ஊற்றாகப் பெருக வைத்ததில் வியப்பென்ன?

ஆனல் நாளடைவில் இப்பாடலாசிரியர் பெயர் மறைக்கப்பட்டு, இப்பாடல் வேறொரு பிரபலமான புலவர் பெயரால் வழங்கத் தொடங்கி விட்டது.

வேலய்யர் பெயர் மறைந்து, இப்பாடல் அந்தகக் கவிவீரராகவ முதலியார் பெயரால் வழங்கத் தொடங்கி விட்டது.

இத்தகவலைச் சென்னை பல்கலைக் கழக சார்பில் 21—12—1927 அன்று சொற்பொழிவாற்றும்போது தமிழ்த் தாத்தா டாக்டர் உ. வே.—சாமிநாதய்யர் அவர்கள் தெரிவித்துள்ளார்கள்.





# கடவுள்

சுபா

சிவன்கோயில்தான். இரும்புக் கிராதிக் கதவுக்குப் பின்னால் பிள்ளையார் சிறைப்பட்டிருந்தார். கதவில் நாதாங்கி போடப்பட்டுப் பெரிய பூட்டுத் தொங்கிற்று.

ராதுவைச் சட்டென்று ஏமாற்றம் தாக்கிற்று. ஒன்பது மணிக்கே கோயில் கதவு சதுரம் சதுரமாய்ப் பிள்ளையாரைக் கூறு போடுகிறதே... பத்தரை மணி வரை திறந்திருக்கும் என்று நந்தினி சொன்னதை நம்பி வெட்டுகிற வெய்யிலில் வந்தது வீண்தானா? ஒருவேளை சன்னிதிக்குப்பின் பக்கம், அந்தக் குருக்கள் பையன், ஏதாவது வேலையில் ஈடுபட்டிருக்கிறானோ?

மெல்ல அடியெடுத்துச் சன்னிதியை வலம் வந்தான்.

ம்ஹூம்... பின்னாலும் இல்லை. பிராகாரத்தின் பின் பக்கம் இன்னொரு வழி திறந்திருந்தது. கையில் பிடித்த பையோடு அந்தக் கேட்டைத் தாண்டி வெளியே வந்தான் ராது. ஒரு சின்ன மைதானமும், சற்றுத் தள்ளி வரிசையாய் ஓலை வேய்ந்த வகுப்பு அறைகளும் அதற்கும் பின்னால் புதிதாய் எழும்புகிற கட்டிடமும் தெரிந்தன. விஜயதசமியில் சரஸ்வதியைபரிச்சயம்செய்து கொடுக்கவேண்டிச்சின்னஞ்சிறுககளைக்கூட்டி வந்திருந்த நாலைந்து பெரியவர்கள் தென்பட்டார்கள். அவர்களோடு நின்று பேசிக் கொண்டிருந்த கூர்க்காவும் தென்பட்டான்.

''கோயிலுக்கு வந்தீங்களா சார்?'' என்று கேட்டான் கூர்க்கா.

''ஆமாம்... அந்த பூஜை செய்யற பையன் எங்கே? போய்ட்டானா?''

''அடுத்த தெருவுல காலேஜ் ஹாஸ்டல் இருக்குதுல்ல? அங்க பூஜை பண்ணணும்னு வந்தாங்க... அவரு வரமாட்டேன்னுதான் சொன்னாரு.... அவுங்கதான் ஒரே புடியா புடிச்சு பத்தே நிமிஷம்னு இழுத்துக்கிட்டுப் போய்ட்டாங்க. இப்ப வந்துடுவாரு...''

ராதுமௌனமாய்க்கோயிலுக்குத் திரும்பி நடந்தான். பேசாமல் வீட்டுக்குப் போய் விடலாமா என்று ஒரு கணம் தோன்றிற்று. உடனே அதை விலக்கினான். நந்தினிக்குத் தாங்காது. 'ஆரம்பமே அபசகுனமாயிடிச்சே!' என்று குமுறுவாள். நல்ல நம்பிக்கை! யாரோ பாட்டி சொன்னாளாம். 'பிள்ளையாருக்கு வாழைப்பழ மாலை போடறேன்னு வேண்டிக்கோ... வாழைப் பழம் மாதிரி குழந்தை வழுக்கிண்டு வெளியே விழும்!' அடித்துக் கொண்டு விட்டாள் நந்தினி.

அடையாறின் உள்வாங்கிய அந்த அமைதிக் காட்டில் அவன் கேட்கிற பூவன் பழத்துக்குத் திடீர் பஞ்சம். கடை கடையாய் அலைந்தும் கிடைத்தபாடில்லை. பூவன் பழம்தான் விசேஷமாம். மெயின் ரோடுக்கு வந்துதான் பிடிக்க முடிந்தது.

சொன்ன விலைக்கே மறு பேச்சுப் பேசாமல் பதினாறு வாங்கிக் கொண்டான். வீட்டுக்கு வந்து பொறுமையாய் ஒவ்வொன்றாய்ப் பிய்த்துக் கெட்டியான சணல் கயிற்றினால் மாலை கோர்க்கிறான்.

இருபத்தாறு நாள் குழந்தை கையைக் காலை உதைத்துக் கொள்ளாமல் நிம்மதியாய்த் தூங்கிக் கொண்டிருக்க, நந்தினி சமையலில் ஈடுபட்டிருந்தாள்.

''அப்புறம் வேற என்ன செய்யணும் உங்க சாமிக்கு?''

''ஒரு தேங்கா வாங்கிக்குங்க...''

தட்டித் தட்டிப் பார்த்து வாங்கிக்கொண்டான். மல்லிகைச்சரத்தை அவள் சொல்லாமல் சேர்த்துக் கொண்டான். கோயிலுக்கு வந்து நின்றாயிற்று. ஒவ்வொரு விநாடியும் எட்டி உதைத்தால்தான் நகர்ந்தது.

சர்ரென்று ஒரு கார் டயர் தேய்ந்து கோவில் வாசலில் நின்றது. பட்டு வேஷ்டியும் மாரை மூடின அங்கவஸ்திரமுமாக ஓர் ஆஜானுபாகு இறங்கினார். டிரைவர் உடன் கதவு திறந்து பக்கத்தில் இருந்த ஒரு பெரிய ரோஜாமாலையைக் கையிலேந்திக் கொண்டு பின்னாலேயே வந்தான். சட்டென்று அவர் நெற்றி சுருங்கிற்று.

''கோயில் பூட்டியிருக்கே... குருக்கள் எங்கே?''

''தோ வந்துடுவாருங்க... பக்கத்துல ஒரு எடத்துக்குப் போயிருக்காரு'' என்றான் பக்கத்தில் வந்த கூர்க்கா.

''சரி டிரைவர்... நான் காரெடுத்துண்டு போறேன்.... அர்ஜண்டா வேலை இருக்கு. குருக்கள் வந்தவுடனே மாலையைக் கொடுத்துட்டு நீ வீட்டுக்கு நடந்து போய்டு.''

டிரைவர் பவ்யமாகத் தலையசைத்தான்.

கையிலிருந்த பர்ஸைத் திறந்தார். ஐந்து ரூபாய் சலவைத் தாளைக் குறுக்கில் மடித்து



உண்டி வாயில் திணித்தார். இடுப்பு அசை யாமல் முதுகு மட்டும் குனிய இரண்டு இரண்டு தோப்புக் கரணம்... கார் தூசி கிளப்பிப் பறந்து விட்டது.

ராதுவுக்குக் கை கால்களில் குடைகிற மாதிரி இருந்தது. போய்விடலாம், போய் விடலாம் என்று துடிக்கிற கால்களுக்கு நந்தினியின் ஏமாற்ற முகம் விலங்கிட்டுப் பிடித்தது.

திடீரெனப் பின்புற மைதானத்தில் பர பரபரப்பு ஓடிற்று. ராது பார்த்தான். ஸ்கூல் கேட் வழியே ஒரு அம்பாஸிடர் வந்து நின்றது.

ஸ்லேட்டும் குச்சியுமாய் நிற்கிற பெற் றோர்களோடு சத்தம் போட்ட சிரிப்புகளில் ஈடுபட்டிருந்த கூர்க்கா ஓடோடி வந்து கதவைத் திறந்தான். பின் சீட்டில் முக்காலுக்கு மேல் ஆக்கிரமித்திருந்த அந்த ஐந்தடிப் பெண்மணி சதுரமாய் இறங்கினாள்.

''இறங்குடா ராஜா...'' என்று அவள் குனியாமல் கூப்பிட, சீட்டோடு தேய்ந்து நகர்ந்து வந்து எம்பின சின்னப் பையனைக் கூர்க்கா தூக்கித்தரையில் இறக்கி விட்டான். முன் கதவு திறக்க நல்ல உயரமாய் சிவப் பாய் இறங்கின இள வயதுப் பெண் அந்தச் சிறிசுக்கு அம்மாவாக இருக்க வேண்டும். அப்படியே அச்சு... டிரைவர் இறங்கி ஓடிப் போய் டிக்கியைத் திறந்து ஒரு மூங்கில் கூடையை எடுத்துக் கொண்டு கோயிலுக்குப் பின்புறமாய் நுழைந்தான். பக்க ஓட்டை களில் ரோஜாக்கள் எட்டிப் பார்த்தன. குவி யலில் மேலே வழிய இருந்த ரோஜாக்கள் மூச்சுத் திணறலில் கூடையை விட்டு வெளி யேறச் சமயம் பார்த்துக் கொண்டிருந்தன. ராதுவுக்குச் சட்டென்று புரிந்தது. ஸ்கூல் ஹெச். எம்மாய் இருக்க வேண்டும். இந்தக் கோவிலுக்கு டிரஸ்டி. அவள் மெல்ல நடந்து வர, பையன் முன்னால் ஓடி வந்தான். கூர்க்கா தொப்பியைத் தூக்கி மெல்லத் தலையைச் சொறிந்தான்.

''பாட்டி... கோயில் பூத்தியிருக்கு...''

பையனின் கூவலைக் கேட்டதும்சட்டென்று நிமிர்ந்தாள். காத்திருக்கும்அத்தனை பேரை யும்பார்த்தாள். பிராகாரத்தில்நுழையாமல் கூர்க்காவைப் பார்த்தாள்.

''எங்கே அந்தப் பையன்?''

''இதோ இப்பத்தாம்மா ரெண்டு நிமி ஷம் முன்னாலே பக்கத்து காலேஜ் ஹாஸ் டல்ல கூப்பிட்டாங்கன்னு பூஜைக்குப் போனாரு... வர்ர நேரம்தான்....''

அவன் வார்த்தைத் தடுமாற்றத்தில் பொய் படித்தான் போலும்.

ராதுவைப் பார்த்து வந்தாள்.

''ரொம்பநேரமாக்காத்திண்டிருக்கேளா?''

''அரை மணி நேரத்துக்குக் கொஞ்சம் மேலே இருக்கும்....''

''மை காட்... பொறுப்பில்லாத பையன். இதோ நான் ஃபோன்லேயே கூப்பிடறேன். கொஞ்சம் பொறுத்துக்குங்கோ... ஏன் பொய் சொல்றே?'' கடைசி வார்த்தை கூர்க்காவைப் பார்த்து.

''ஆபீஸ் ரூம் சாவி எடுத்திண்டு வா.''

புடவையில் நிறையக் கொசுவம் வைக்க முடியாத அகல இடுப்பு. பணம் பணமாய் வீங்கின முகச்சதைகள். வெட்டினபுருவமும், மெலிதான உதட்டுச் சாயமும் வயதை இறக்கி நாற்பதுக்குள் மதிப்பிட வைத்தது. அவளுடைய யானை அடியைப் பின்பற்றிக் கையில் பற்றின சாவியோடு கூர்க்கா காவ் பின்னைத் தொடர்ந்தான்.

''எங்க போயிட்ட நீ? எத்தனை பேரு இங்க காத்திண்டிருக்கா பாரு...'' என்று குரல் அறையில் அபாரமாய் வெளியில் பாய்ந்தது. ஃபோனை அந்தப் பக்கம் எடுத்த வர்கள் காதுச் சவ்வு கிழிந்திருக்கலாம் கூட.

ஐந்தே நிமிடம் கோவில் வாசலுக்கு சைக் கிள் வந்தது. சட்டென்று காலை மாற்றி இறங் கின வேகத்தில் சைக்கிளைச்சுவரோடு சாய்த்து விட்டுக் குருக்கள் பையன் உள்ளே பதறி நுழைந்தான். வாயோரங்கள் அஷ்ட கோணலயாய் நெளிய அசடாய்ச் சிரித்து 'டேய் கண்ணு' என்று கார் சிறுவனைக் கன் னத்தில் பூ ஒத்தி, அவசரமாய் சன்னிதியின் பூட்டில் சாவியைத் தடுமாறி நுழைத்துத் திறந்து நுழையப் போகிற சமயம் கம்பீரக் குரல் வந்து தாக்கிற்று.

''கை கால் அலம்பிண்டியோ? நேர சன் னிதிக்குள்ள நுழையறே....''

''தோ மாமி...'' என்று மறுபடியும் பின் னால் ஓடினான். பம்பு அடிபடும் சத்தம் கேட் டது. திரும்பவும் ஓடிவந்தான்.

ராது பையை நீட்டினான். உடனே காரி யத்தை முடித்துக் கொண்டு கிளம்ப வேண் டும் போலப் பரபரத்தான்.

''கொஞ்சம் பொறுங்கோ... இவாளை முடிச்சுட்டு வந்துடறேன்....'' குனிந்து கூடையை எடுத்துக் கொண்டான். பொங்கி வழிகிற பூக்களோடு அதை அந்த அம்மா விடம் நீட்டினான். அவள் வெறுமனே தொட் டுக் கண்களை மூடிக்கொள்ள பலமாய்க்கூரை மோதுகிற குரலில் மந்திரம் சொன் னான்.

''இந்த ஸ்லேட்டை ஸ்வாமி பாதத்திலே வச்சு அர்ச்சனை பண்ணு.''



ராதுவுக்குப் பிள்ளையாரின் பேரிலோ மந்திரங்களின் பேரிலோ கவனம் செல்லவில்லை. இத்தனைநேரமாய்க் காத்துக்காத்துச் சலித்திருக்கையில் நிமிஷம் முன்னால் வந்தவனுக்கு என்ன வாழ்வு என்ற கோபம் உடலெங்கும் ஓடிற்று.

மற்றவர்கள் இந்தப் பாதிப்பு இல்லாதவர்களாகத் தெரிந்தார்கள்.

அர்ச்சனை முடிய ஐந்து முக கற்பூரம் ஏற்றப்பட்டு, வெண்கலம் அதிர மணி யடித்துப்பிள்ளையாரின்உச்சியிலிருந்து பாதம்வரை மெல்ல இறக்கி வலம் வந்து வெளியே வந்து நீட்ட முதலில் ஹெச். எம். அவன் பேரன், மருமகள் என்று எல்லோரிடமும் கற்பூரம் வந்து போயிற்று.

''அந்த ஸ்லேட்டை எடு...''

எடுத்துக் கொடுத்தான். கையோடு கொண்டு வந்த சாக்பீஸைப் பேரன் கையில் கொடுத்து அவன் கையைப் பிடித்துப் பெரிசாய் ஒரு 'அ'னா எழுதி நமஸ்காரம் செய்து அவன் ஆரம்பினான்.

''மாமா கக்கண்டு...'' என்று பேரன் சிணுங்கினான்.

''இதோடா கண்ணு...''

ஸ்டூலில் ஏறிப் பரணியிலிருந்து ஒரு சின்ன டப்பாவை எடுத்துக் கல்கண்டுகளைப் பையனிடம் நீட்டினான் அவன்.

''இங்க ஒரு அர்ச்சனை பண்ணணும்'' என்றான் ராது கரகரப்பாய்.

''கொஞ்சம் வெயிட் பண்ணுங்கோ... இவா டிரஸ்டி.. இவாளை அனுப்பிச்சுட்டு வந்துடறேன்...''

ஹெச் எம்மும் பரிவாரமும் பின்புற கேட் வழியே காரை நோக்கி நடக்க, குருக்கள் பையன் பின்னாலேயே அர்ச்சனைக் கூடையோடு நடந்தான். கார்க் கதவைத் திறந்து பிடித்துக்கொள்ள முதலில் பேரன் அப்புறம் எச். எம்... கார்க் கதவை அறைந்து சாத்திக் கொண்டான். மருமகள் முன்னால் ஏறிக்கொள்ள கார் மெல்ல பின் வாங்கிற்று.

அவன் கோயிலைப் பார்த்து நடக்கிறநேரம் கார் சர்ரென்று மீண்டும் முன்னால் வந்து நின்று 'பீங்க்' என்று அலறிற்று.

''என் செருப்பைக் கோயில் வாசல்லேயே விட்டுட்டேனு பாரு...'' என்று குரல் கிழித்தது.

பையன் ஓடிவந்து, செருப்பை எடுத்துக் கொண்டு காரைப் பார்த்து வேகமாய் நடந்தான்.

ராது சட்டென்று பையைத் தூக்கிக் கொண்டு வேகமாய் நடந்து, கையை ஆட்டி 'நில்லுங்கள்' என்று சைகை செய்து காரை நெருங்கினான்.

''அர்ச்சனைதானே.... இதோ வந்துட்டேன்....'' என்றான் குருக்கள் பையன்.

''நீ நகர்ந்துக்க'' என்றான் ராது. ''நீங்க ஒரு நிமிஷம் கீழே எறங்கறீங்களாம்மா?''

''என்ன விஷயம்?'' குழப்பமாய்ப் புரியாமல் கேட்டான் ஹெச். எம்.

''நீங்ககொஞ்சம் எறங்குங்கசொல்றேன்!''

எல்லோர் கவனமும் இங்கேயே திரும்பிற்று.

அவன் குரலில் இருந்த அழுத்தம் கொடுத்த தூண்டுதலில் ஹெச். எம். அரை உடம்பை வெளியே கொண்டு வருகிற போது சட்டென்று கையிலிருந்த வாழைப் பழ மாலையை அவன் கழுத்தில் போட்டு விட்டு வாசலைப் பார்த்து நடக்க ஆரம்பித்தான் ராது.



# 3 மாதத்திற்குப் போதுமான இரும்புச்சத்துடன் குழந்தை பிறக்கிறது



## 3 மாதம் ஆனபின், குழந்தைக்குத் தேவையான இரும்புச்சத்து பாலில் மட்டுமே கிடைப்பதில்லை.

இரும்புச்சத்து அதிகமுள்ள **:.பாரெக்ஸ்** கொடுங்கள்

"தாயிடமிருந்து ஏராளமான இரும்புச் சத்தைப் பெற்று குழந்தை பிறக்கிறது. பிறந்த பிறகு மெல்லமெல்ல இரும்புச் சத்தின் அளவுக் குறையத் தொடங்குகிறது. பால் நல்ல உணவாயிருப்பினும் இரும்புச் சத்துப் பற்றாக் குறையினால் அது முழுமையாவதில்லை. ஆகவே, குழந்தைக்கு இரும்புச் சத்து அடங்கிய திட உணவுத் தேவைப் படுகிறது."

—Dr. Subhash C. Arya "Infant & Childcare for the Indian mother"

**டாக்டர்கள் :.பாரெக்ஸ். சிபாரிசு செய்யக் காரணம்?**

குழந்தைக்கு திட உணவைத் துவங்குவதற்கு தனிப்படத் தயாரிக்கப் பட்டது :.பாரெக்ஸ்— குழந்தையின் இளம் ஜீரண சக்திக்கு ஏற்ப பக்குவம் செய்யப்பட்டது. இதில் விரைந்த வளர்ச்சிக்கான புரதச் சத்து; சக்திக்கான கார்போஹைட்ரேட், கொழுப்பு; எலும்புகளை திடமுடனும் பற்களை பலமுடனும் வளரச் செய்திடப் போதுமான கால்ஷியம், பாஸ்பரஸ், வைட்டமின்கள் உள்ளன. குழந்தையின் இரத்தத்திற்கும் உடல் ஆரோக்கியத்திற்கும் வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும் அவசியமான இரும்புச்சத்தும் ஏராளமாக அடங்கியது—:.பாரெக்ஸ்.






**டாக்டர்கள் சிபாரிசு செய்வது :.பாரெக்ஸ்**
**குழந்தையின் விரைந்த முழுவளர்ச்சிக்கு உன்னதமான திட உணவு**

CASGLF-30-203 TAM

# யூ.எல்.ஐ.பி. +

## பாதுகாப்புக்கு மறு பெயர்




### அனைத்தும் அடங்கிய ஒரே சேமிப்புத் திட்டம்

மற்ற திட்டங்களைவிட பல்வேறு நன்மைகளைக் கொண்ட சிறந்ததொரு திட்டம்தான் யூ.எல்.ஐ.பி. +. உங்களுக்கும் உங்கள் குடும்பத்துக்கும் பாதுகாப்பு அளிக்கும் சேமிப்புத் திட்டம்.

யூ.எல்.ஐ.பி. + ன் நன்மைகள்

- உயர்ந்த வருமானம். உங்கள் சேமிப்புத் தொகை ரூ. 12000 திட்ட முடிவில் (10 ஆண்டில்) ரூ. 18000 மாகவும் (15 ஆண்டில்) ரூ. 22000 மாகவும் உயர்ந்து விடுகிறது.
- வரிச்சலுகை. இத்திட்டத்தில் முதலீடு செய்யும் உங்கள் தொகைக்கு பூரண வருமான வரி விலக்கு உண்டு.
- விபத்து பாதுகாப்பு. நீங்கள் எடுக்கும் திட்டத்தின் மதிப்பு எதுவானாலும், ரூ. 15000 வரை உங்களுக்கு விபத்து பாதுகாப்பு அளிக்கப்படுகிறது.
- ஆயுள் பாதுகாப்பு. நீங்கள் சேரும் திட்டத்தின் தொகைக்கு சமமாக உங்களுக்கு ஆயுள் பாதுகாப்பு அளிக்கப்படுகிறது. மருத்துவ பரிசோதனை தேவையில்லை.
- ரூ. 24000 வரை சேமிக்கலாம். ரூ. 12000க்கு ஒரு திட்டமும் அதிலிருந்து 3 வருடங்கள் கழித்து அதே தொகைக்கு மற்றுமொரு திட்டமும் எடுத்துக் கொள்ளலாம்.

பாதுகாப்பான வாழ்க்கைக்கு இன்றே யூ.எல்.ஐ.பி. திட்டத்தில் சேர்ந்திடுங்கள்.

இதர விபரங்களுக்கு எங்களையோ அல்லது எங்கள் ஏஜெண்டுகள் மற்றும் தலைமை பிரதிநிதிகள் அல்லது உங்களுக்கு அருகிலுள்ள பாங்க் ஆப் பரோடாவின் கிளைகளையோ அணுகுங்கள்.

எங்கள் தலைமை பிரதிநிதிகள் :

ஏ. தனபால், 10 ஜே. ஹுஸுர் ரோடு, கோயம்புத்தூர் 641 018. போன் : 34776 (கோயம்புத்தூர், பெரியார் மாவட்டங்களுக்காக)

எம். ராமமூர்த்தி, 30, எல்.ஐ.சி. காலனி, மதுரை-625 002 (மதுரை மாவட்டத்துக்காக)

கே. முத்துசாமி, 52-ஏ, வ.உ.சி. நகர், தஞ்சாவூர்-613 007. போன் : 1224 (தஞ்சாவூர் மாவட்டத்துக்காக)

## யூனிட் டிரஸ்ட் ஆப் இந்தியா

(ஒரு பொதுத்துறை நிதி நிறுவனம்) தலைமை செயலகம் : பம்பாய்-20

தெற்கு பிராந்திய செயலகம் :
ரெஜினா மேன்ஷன், 46, செகண்ட்லைன் பீச், சென்னை-600 001. தொலைபேசி : 27433

### உங்கள் சேமிப்பின் தொடக்கம் யூனிட்டுகளாகவே இருக்கட்டும்

UTI-62-81-Tam

## திருத்தலம் கண்டேன்:



உ. கஸ்தூரிகாந்தி

# கோபுரத்து காந்தி மகான்!

அம்மனின் அவதார மகிமையையும் திருத்தலப் பெருமையையும் பல வீர வரலாறுகளையும், காவியச் சுவை மிக்க உண்மை நிகழ்ச்சிகளையும் உள்ளடக்கி நிற்பதுதான் சிவகெங்கை தேவஸ்தானத்தைச் சார்ந்த பாகனேரிப் புல்வாநாயகி அம்மன் திருக்கோயில்.

அவற்றில் ஒன்று:

புல்வாநாயகி அம்மன் கோயில் தைலக்காப்பு மண்டபத்தருகே, குடி கொண்டுள்ளார் எச்செயலும் விக்கினமின்றி விளங்க வைக்கும் விநாயகப் பெருமான். இவர் பக்திக்கு மட்டுமல்ல; வீரத்துக்கும் வித்திட்ட முதற் கழியாகத் திகழ்கிறார். கணபதி பிரதிஷ்டை செய்யப் பட்ட செயல், காவியச் சுவை மிக்க வீரவரலாறாகத் திகழ்கிறது.

பாகனேரியில் மிகுந்த அளவில் வாழ்கிற "வாள்கோட்டை நாட்டார்" எனப்படும் கள்ளர் குலத்தில் தோன்றிய 'வாளுக்கு வேலி' என்பாரே கணபதியைப் பிரதிஷ்டை செய்தவராம்.

வீரத்தின் விளை நிலமாகத் திகழ்ந்த 'வாளுக்கு வேலி' தம் தங்கையை அட்டமா சித்தி விளைவிக்கும் 'பட்டமங்கலம்' எனும் ஊரில் திருமணம் புரிந்து கொடுத்தார்.

பாகனேரியில் நடைபெறும் வீர விளையாட்டான 'மஞ்சுவிரட்டு' எனும் 'ஏறு தழுவும் விளையாட்டு'க்கு மாடு கொண்டு வந்தார் தங்கையின் கணவர். அவருடைய மாட்டை மடக்குவாரில்லை. மானம் காக்க வேண்டி, வாளுக்கு வேலியின் தம்பி, அக்காளையும்நினையாது, அக்காளையை அடக்கி, அதற்கு அடையாளமாக வாலையும் சீவிக் கோயில் சுவாமியோடு சேர்த்துக் கட்டிவிட்டார். இன்றும் கட்டப்படுகிறது.

அவமானம் அடைந்த மைத்துனன், பழி வாங்கிடக் கருதினர். தங்கைக்குப் பொங்கற் சீர் கொண்டு வரும்போது, விருந்திடாது பச்சைப் பனை ஓலையில் கூழ் வார்க்கத் திட்டமிட்டார். இதனைத் தங்கை வாளுக்கு வேலியிடம் தெரிவிக்கவே, திரும்பிவிட்டார் வாளுக்கு வேலி. மீண்டும் தோற்ற தங்கையின் கணவன், மனைவியை இரக்கமின்றித் துன்புறுத்தினர். பொறுக்க மாட்டாத பொன்னரசி புறப்பட்டு விட்டாள், பிறந்தகம் நோக்கி. இரவோடிரவாகப் பாகனேரிக்கு வந்தபோது தொடர்ந்து வந்தது வளர்த்த நாயொன்று. அதனைக்கண்ட தங்கை, வெறுப்பின் மிகுதியால் தன் கழுத்திலிருந்த தாலியை நாய்க் கழுத்தில் கட்டித் திருப்பி விரட்டி விட்டாள்.

செய்தி அறிந்த வாளுக்கு வேலி பெண்ணைத் துன்புறுத்தியவருக்குப் பெண் மூலம் புத்தி புகட்ட எண்ணிப் பெண்கள் இருவரை அனுப்பிப் பட்டமங்கலத்துப் பிள்ளையாரைக் கவர்ந்துவரச் செய்து "காய்ந்தவ கால கணபதி" எனப் பிரதிஷ்டையும் செய்தார்.

பிள்ளையாரைக் காணாத பட்டமங்கலத்தார், பாகனேரித் தெருக்குத் தேட விரைந்தனர். அப்போது அவருக்கு முன்பாகப் புல்வாநாயகி [illegible] பெண் போலத் தோன்றி



தடுத்தாட்கொள்ள முனைந்தாள். அவன் சக்தியை அறியாது, மேற் சென்றனர். தேருக்குப் பல அடி தூரத்தில் வரும்போது, பட்டமங்கலத்தார் கண் தெரியாது திகைத்தனராம். பின் கோயில் தீர்த்தம் திருநீறு தரப்பெற்று பார்வை திரும்பியதாம்.

இரு ஊர்க் கள்ளர் குலத்தவரும் கணபதிக்காகத் தமக்குள் போரிட்ட இடம் கோயிலருகில் "குருதி வழியும் பொட்டல்" என இன்றளவும் வழங்கப்படுகிறது. இதன் பின்னர் கொள்வினை, கொடுப்பினை இல்லாது போயிற்று இரு ஊராரிடத்தும்.

பன்னூறு வருடங்களுக்குப் பின் பாகனேரிக் கள்ளரான மத்திய விவசாய அமைச்சர் திரு ஆர். வி. சாமிநாதன் பட்டமங்கலத்தைச் சேர்ந்த இலங்கைப் பாராளு மன்ற அமைச்சர் திரு தொண்டைமான் வீட்டில் பெண் எடுத்து உறவைப் புதுப்பித்துள்ளார்.

இக்கோயிலில் மற்றொரு விசேஷமும் உண்டு. கோயிலின் இராஜ கோபுரம், இந்தியாவை ஆங்கிலேயர் ஆண்டபோது புதுப்பிக்கப்பட்டது. அன்று கனன்ற தேச விடுதலை வேள்வியில் அவ்வூரார் பலரும் பங்கேற்றனர். தேச பக்தியும் தெய்வ பக்தியும் ஒருமித்த ஊராதலின் இராஜ கோபுரத்தில் தேசப் பிதா காந்தி அடிகளையும், இந்து மத விளக்கமெனத் திகழ்ந்த விவேகானந்தரையும் கொலுவிருக்கச் செய்துள்ளனர். இருவருக்கும் இந்தியாவின் வேறெந்தப் பகுதியிலும் இவ்வளவு உயர்ந்த இடத்தை அளித்திருப்பதாகத் தெரியவில்லை.

புல்வா நாயகி அம்மன் கோயில், வழிபாடு இயற்றும் இடமாக மட்டுமல்ல; நீதிமன்றமாக மட்டுமல்ல, திருமணப் பதிவு அலுவலகமாகவும் செயல்பட்டு வருகிறது. ஆவணக் காப்பகமாகவும் விளங்குகிறது.

பாகனேரிக் கள்ளர்கள் நான்கு உட் பிரிவினை உடையவர்கள், பிரிவுக்கு ஒரு தலைவர் உண்டு. அவ்வப்பிரிவைச் சார்ந்த தலைவர்கள் தரும் "மண ஒப்புதல் ஓலையை" புல்வா நாயகியம்மன் கோயிலில் கொடுக்க வேண்டும். அது அங்குள்ள "முறியில்" சேர்க்கப்பட்டுப் பாதுகாக்கப்படும். ஓலையைப் பெற்றுக்கொண்டதற்கு அடையாளமாகக் கோயில் மாலை மணநாளன்று அளிக்கப்படும். இவ்வாறு "மாலை ஓலை" வாங்காத திருமணங்கள், அங்கீகரிக்கப்படாதது மட்டுமல்ல, கண்டனத்துக்கு உரியவையுமாகும்.

இவ்வாறு மக்கள் வாழ்வில் அகமும் புறமும் இரண்டறக் கலந்து நிற்கிறாள் அன்னை புல்வா நாயகி.



# ஆட்டக்காரர்கள் வெட்டுகிறார்கள்

பத்து ஆண்டுகளுக்கு மேலாக இந்தியாவில் நடக்கும் கிரிக்கெட் பந்தயங்களில் விளையாட்டு வீரர்களுக்கு மைதானத்தில் சாப்பாடு உ. முதலியவைகளைக் கொடுத்து வரும் அசோக் கேட்டரிங் சர்வீஸ் உரிமையாளர் திரு தாமஸ் ராஜன் அவர்களைச் சந்தித்து ஆட்டக்காரர்களின் சாப்பாடு பற்றி விளக்கமாகக் கூறும்படி கேட்டேன்.

போன்லெஸ் ரோஸ்டு சிக்கன், ரோஸ்டு லெக் ஆப் மட்டன், ஃபிங்கர் சிப்ஸ், மேஷ்ட் பொட்டேடோ, ரைஸ் புட்டிங், சாக்லேட்டு ஐஸ்கிரீம் இவைதாம் இங்கிலாந்து ஆட்டக்காரர்கள் விரும்பிச்சாப்பிடும் மெனு.

அது என்ன போன்லெஸ் சிக்கன்?

சிக்கன் செய்து அதில் உள்ள எலும்பெல்லாம் நீக்கிவிட்டுச் சதையை மட்டும்தான் விரும்பிச் சாப்பிடுகிறார்கள். 18 பேருக்கு 15 சிக்கன் செய்ததாகக் கூறுகிறார்.

மேஷ்ட் பொட்டேடோ?

உருளைக்கிழங்கை வேகவைத்து உரித்து இத்துடன் பால், வெண்ணெய், மிளகு, உப்பு முதலியன சேர்த்து நன்றாக மசித்து வைப்போம். இதை இவர்கள் விரும்பி நிறையச் சாப்பிடுகிறார்கள்.

தேநீரைச் சிலர் பாலில்லாமல், சிலர் சர்க்கரை இல்லாமல், சிலர் இலேசாக எலுமிச்சப் பழச் சாறு கலந்து இப்படிப் பலவிதமாகச் சாப்பிடுகிறார்களாம்.

நம்முடையவர்களுக்கு பூரி, தால், தயிர் சாதம், தயிர்வடை, சிக்கன் இப்படி.

கவாஸ்கர் பேட்டிங் செய்வதற்கு முன்பாக நிறையத் தயிரில் சர்க்கரை சேர்த்து இத்துடன் ஃப்ரூட் சாலட் அல்லது லஸ்ஸி இது மட்டும்தான் சாப்பிடுவார்.

விஸ்வநாத் நான்-வெஜிடேரியனும் சாப்பிடுவார். என்றாலும் விரும்பிச் சாப்பிடுவது சாதமும் முருங்கைக்காய்ச் சாம்பாரும்.

கபில்தேவிற்கு சிக்கன் லெக் ரொம்பப் பிடிக்கும்.

"இன்று என்ன மெனு?" என்று கேட்கப் போனால் அநேகமாக "நேற்றைய மெனு நன்றாக இருந்தது. அதையே இன்றும் செய்யுங்கள்" என்றுதான் எல்லோரும் கூறுவார்களாம்!

—கலாமூர்த்தி




daCunha/L-Sham./127/T.

# கோர்ட்

''அதான் சொல்லிட்டேன்யா. ஜூலை இருபத்தெட்டாம் தேதி. சாட்சிகளுக்குப் படி கட்டணும். அந்த ஆளு வாய்தா கேட்பான். நான் மாஜிஸ்டிரேட்டு கிட்டச் சொல்லியிருக்கேன். வாய்தா தரமாட்டார்... சரி பீஸை எடு.''

''புதன் கிழமை வர்றபோது தர்றேனுங்க.''

''புதன் கிழமை வரும். பீஸ் வராது. எடய்யா... டீ.விக்குப் பணம் பாக்கி.... என்னு ஐம்பது ரூபாய் நீட்டறே... ஒன் கேஸையே எடுத்திருக்கக் கூடாது.... உங்களுக்கெல்லாம் அந்த வாய்தா வக்கீல்தான் லாயக்கு.''

''ஹலோ ஜகந்நாதன்... காலைலே பிடிச்சுக் காத்துக்கிட்டு இருக்கேன். ஜட்ஜ்மெண்ட் காப்பி தர்றேன்னீங்களே.''

''காலைலே மதுராந்தகத்திலே ரிசீவர் வேலை. என் ஜூனியர் சிவஞானத்திடம் கேட்டால் கொடுத்திருப்பானே... ஆமாம் ஓ எஸ். ஒன் ஃபோர் டு என்னுச்சு?''

''ஸைலன்ஸ்... ஸைலன்ஸ்... சத்தம் போடாதீங்கய்யா... அப்பாலே முன்சீப் ந்தநாப் போடுவாரு! யாரம்பா போவல்ல. நீ பொண்ணு கொடுத்துப் பொண்ணு வாங்கற சமாசாரத்தை அந்த வெத்திலே பாக்கு கடையாண்டை போய்ப் பேசு... நவுரு.''

''என்னப்பா முருகேசு... இன்னிக்கு நம்ப வரப்புத் தகராறு கேஸ் நிச்சயமா வர்றபடி பார்த்துக்கப்பா...''

''அல்லாருக்கும் கோர்ட்டுக்கு வந்து இந்த டவாலி முருகேசைப் பாக்கறப்பத்தான் அவசரம் வந்துடும். மூணு நாளா மர்டர் கேஸ் நம்ப தாவு தீர்ந்துடுது.... சரி... பொடி இருக்குதா?''

''கேள்யா... இவர்தான் மர்டர் கேஸை விசாரிக்கிற மாஜிஸ்டிரேட் மாதிரி பேசறாரு.''

''என்னங்க த்ரீ நாட் செவன்... உங்களுக்குச் சாட்சி அகப்பட்டாரா?''

''வழக்கமா வர்ற துரைக்கண்ணுக்கு இன்னிக்கு சைதாப்பேட்டை கோர்ட்லே வேலை இருக்குதாம். பெரிய வக்கீலை விட, இந்தப் பொய் சாட்சி துரைக்கண்ணு பிஸியா இருக்கான்... ஆமாம்... எஸ்.ஐயைப் பூனமல்லிக்கு மாத்திட்டாங்களாமே... போவட்டும். அங்கே எல்லாரும் நியமத்



# வராந்தா

லங்க அங்கே போறப் பொறவுதான் இந்த தீர் நாட் செவனோட மகிமை புரியும்...''

''ஏங்க கன்னு கேஸை எடுத்துட்டாங்களா?''

''கன்னுதானே... போய்ச் சோத்துக்கை பக்க ரூம்லே போ....''

''ஏய்... அல்லாரும் எழுந்திருங்க... மாப்பிள்ளே வூட்டுக்காரங்க—மாதிரி குந்திக் கினு இருக்கீங்க. வக்கீலு கூப்பிடறாரு. ஒழுங்காய்ப் போங்கய்யா... ஏய்... வேட்டி யைக் கீழே வுடு... ஏரிக்குப் போவுறமாதிரி கட்டியிருக்கே...''

''கோபால்... கோபாலு... கோபாலான' வாயேன்யா... இவருக்கு அம்பத்தெட்டு தடவை குரல் கொடுக்கணும். பெரிய கவர்னரு!''

''ஆமான்யா... கவர்னரைக் கூட நீ சாட் சிக் கூண்டிலே எத்திப்புடுவே.''

''ஹலோ சாமிநாதன்... இங்கேதானே இருப்பீங்க. சிவில் கோர்ட்டிலே அந்த உயில் கேஸ் இழுத்துக்கிட்டு இருக்கு. போய் அட் ஜர்ன்மெண்ட் வாங்கின்டு வந்துடறேன். அதுக்குள்ளே ஃபோர்ஜரி கேஸ் வந்தால்—ஹண்ட்ரட் நைன் பர்ஸெண்ட் வராது — அப் படியே வந்தால், என்னிக்கு போஸ்டிங் ன்னு பார்த்துச் சொல்லுங்க.''

''மணியாவுதே. கோர்ட் கிளார்க்கு மூ சாப்பிடப் போனவரு வரலே... காஞ்சிபுரம் பஸ் போனால் கையைக் காமிச்சு நிறுத்தப்பா. பொழுது போவாரத்துக்குள்ளே ஊர் போய்ச் சேரணும்; நாளைக்கு அறுவடை. நம்ப இல்லாவிட்டால் சாப்பிட்டுடுவாங்க. வராரே தொரை... ஸார்... பஸ்ஸுக்கு டயமாச்சு. நம்பளைக் கவனிச்சு அனுப்பிடுங்களேன்.''

''நான் கவனிக்கிறேன்யா. ஆனா நீ ரொம்பத்தான் நம்பளைக் கவனிக்கிறே பாரு. தலைக்கு மேலே வேலை இருக்கு. சனிக் கிழமை இன்ஸ்பெக்ஷனுக்கு ஜட்ஜு வராரு.''

''....கனம் கோர்ட்டார் அவர்களே... ஆகவே என்னுடைய கட்சிக்காரர் முற்றிலும் நிரபராதி என்று கூறி என் வாதத்தை முடித்துக் கொள்ளு முன் போலீஸ் தரப்பில் ஆஜரான என் அருமை நண்பர், பல தவறான வாதங்களையும், அடிப்படையில் உண்மை யில்லாத விஷயங்களையும் கூறியதை எடுத்துக் காட்டுவது என் கடமையாகிறது என்பதை மட்டும் சொல்லிவிட்டு....''

''யூ ஹேவ் ஆல்ரெடி கவர்ட் தோஸ் பாய்ண்ட்ஸ். ஹேவ் யு எனி ஃப்ரெஷ் சப் மிஷன் டு மேக்... தி கோர்ட் ஈஸ் அர்ஜன்ட்!''





# இழப்பு

**மும்தாஜ்யாசீன்**

இன்ன காரணம் என்று எதுவும் சொல்லி விட முடியாது. இந்த நொடியிலிருந்துதான் என்கிற ஆதாரமும் இல்லை. திடீரென்று தான் அவளைப் பார்க்கத் தோன்றியது.

வழக்கம் போல மந்தமாகவே கண் விழித்தான். கையில் காப்பி தம்ளரையும், முகம் நிறைய அலுப்பையும் வைத்துக் கொண்டு மங்களம் எதிரே நின்று கொண்டிருந்தாள். தாறுமாறாகக் கை கால்களைப் பரப்பி மூன்று குழந்தைகளும் படுத்துக் கிடந்தன. எழுந்து, எண்ணெய் வழியும் முகத்தோடு மனைவியைப் பார்க்கச் சகிக்காமல் ஒரு பக்கமாகத் திரும்பியபடி வாய் கொப்புளிக்கப் புழக்கடைக்குச் சென்ற போதுதான், முதன் முதலாக அவளது நினைப்பு வந்தது.

அவனுக்குப் பிடித்த வெளிர் மஞ்சள் நிறப் புடவையுடன் தோன்றிய முகம். பிரத்தியேக அக்கறையுடன் வாரப்பட்ட கூந்தல். வசீகரமான புன்னகை. வெட்கம். இந்த ஒரு மாதமாகவே அவளது ஞாபகம் அடிக்கடி வந்து கொண்டிருந்தது.

தண்ணீர்க் குடத்துடன் எதிரில் வருகிற ஷ்யாமி — சதங்கையைக் குலுக்கிய மாதிரி கலகலவென்று சிரிக்கிற ஷ்யாமி — அவனோடு சினிமா, நாடகம் பார்த்த ஷ்யாமி -- எப்போதும் தலை நிறைய மல்லிகைப் பூ வைத்துக்கொண்டுதான் வருவாள். திரும்பிப் போகும்போது ஒன்றிரண்டு பூவாவது சிதறிக் கிடக்கும். அவளது சின்னச் சின்ன முகங்களாய்....

''உனக்கு மட்டும் ஏன் ஷ்யாமி இவ்வளவு அழகான முகம்?''

ஆறு வருடங்களுக்கு முன்பு இந்த ஊரில் இதே ஆபீசில் எல். டி. சி. யாகக் குப்பை கொட்டியவன்தான் அவன். இப்போது யு. டி. சி.யாக பிரமோஷனில் வந்திருந்தான். ஒரு மாதம் ஆகிறது.

வாழ்க்கையில்தான் எவ்வளவு வித்தியாசம்? அப்போது அவனுக்கு மணமாகவில்லை. சொப்பனத்தில் நிறையச் சங்கதிகளைக் கண்டு ரசிக்கிற வயது. இப்போது மூன்று குழந்தைகளுக்குத் தகப்பன்.

முன்பு போல் பெண்ணொருத்தியின் சிநேகிதத்துக்காக ஏங்கி, ரகசியமாகச் சந்தித்து, பேசி, நாள் முழுதும் இனிக்கிற முகத்தைச் சுமந்து, மனம் முழுவதும் மணக்கிற புஷ்பமாய்....

''இன்னொரு முறை நாம் காதலித்துக் கொள்ள முடியுமா ஷ்யாமி?''

ரவீந்திரன் ஷேவிங் செட்டை எடுத்துக் கொண்டு அமர்ந்தான்.

''மணி ஏழரையாறது. சீக்கிரம் முடிச்சுட்டுக் குளிக்க வாங்கோ...'' சமையற்கட்டிலிருந்து மங்களம் குரல் கொடுத்தாள். எதையும் இயந்திர ரீதியில் வெளிப்படுத்தத்தான் மங்களத்துக்குத் தெரியும். மனத்தைத் தொடத் தெரியாது.

ஒருமுறை அவன் ஷ்யாமியோடு சினிமாவுக்குப் போனது ஞாபகம் வந்தது.

வழுவழுப்பான முகத்தைத் தடவி, ''ஷேவ் பண்ணிண்ட அன்னிக்கு தர்மேந்திராதான் டியர்'' என்றான் அவன்.

''நீ மட்டும் என்ன? இந்தப் புடவையில் ஹேமமாலினி இல்லையோ?''

'க்ளுங்' என்ற சிரிப்பு. ''படத்துக்குன்னு வந்துட்டு இதென்ன என்னையே பார்த்துக்கிட்டு!''

''இதுதான் பிடிக்கிறது பார்க்கறேன்.''

''தினத்துக்கும் பாக்கறது போதாதா?''

''ம்ஹூம்... இந்த முகத்தை எப்பவும் பார்த்துக்கிட்டே இருக்கணும்.''

''5.60 தண்டம். நல்லாப் பார்த்துக்குங்க.''

திரும்பி உட்கார்ந்து கொள்கிறாள். அரை இருட்டிலும் பளிச்சென்று துடைத்துவைத்த மாதிரி தெரிகிற முகம்.

எதிர் வீட்டில்தான் குடியிருந்தாள். ஆனால் எப்போதாவது ஒரு முறைதான் இது போன்ற தனிமை கிட்டும். கிடைக்கிறதை முழுமையாகப் பயன்படுத்திக் கொள்ள மனம் தவியாய்த் தவிக்கும். இன்னொரு முறை அறைக்கு வந்திருந்தாள். அன்றைக்கு ஏதோ ஒரு விசேஷம் என்பதால் பலகாரங்களும் அவளோடு வந்திருந்தன. ''கேசரி எப்படி இருக்கு?'' ஒரு வாய் ஊட்டிவிட்டுக் கேட்டாள்.

''பிரமாதம்.''

''உங்களுக்குப் பிடிக்கும்னு நானே செய்தது.''

''நீயா? இந்த விரல்களா! இன்னும் பிரமாதம்'' மிருதுவான அவளது விரல்களை உதட்டருகே கொண்டு செல்ல, ''அய்யே..., ஜன்னல் திறந்து கெடக்கு. விடுங்க'' என்று பின் வாங்கிக் கொண்டாள்.

அது ஒரு சாக்கு. அவனுக்குத் தெரியும்.

''என்னை அவஸ்தைப்பட வைக்கணும் உனக்கு. இல்லையா ஷ்யாமி?''

''நாள் வரும் பொறுங்க.''

''எப்ப ஷ்யாமி?''

''உங்க கிட்டதான் ஒரு முயற்சியும் காணோமே ''

''பைத்தியக்காரி... கொஞ்ச நாள்லே தாலிக்கு ஆர்டர் கொடுத்துட்டு, வாடீன்னு வந்து நிக்கப் போறேன். பாரேன்.''

மறுபடியும் சிரிப்பு. அவனே நினைத்தாலும் மறைக்க முடியாத சிரிப்பு. இந்த மாறுத

சிரிப்புத்தான் அவளது முகத்தோடு அவ னுக்கு ஞாபகத்தில் இருந்தது. 'உலகில் உன் ஒருத்திக்கு மட்டும் ஏன் ஷ்யாமி இவ்வளவு வசீகரம், ப்ரியம்?''

குளித்துவிட்டு ரவீந்திரன் ஆபீசுக்குப் புறப்பட்டான்.

ஆபீஸ் பழகிப் போயிருந்தாலும் வேலை என்னவோ அவனுக்கு அலுத்தது. பென்ஷன் பிரிவில் இருந்தான். தினமும் சந்திக்க நேர்கிற வயதான மனிதர்கள், விதவைகள் இருமல்கள், கொஞ்ச நேர சிநேகிதத்தில் தமது முந்திய பிரதாபங்களை மரத்தடியில் பரிமாறிக்கொள்கிற பேச்சுக்கள்.

இந்த வாழ்க்கை என்றைக்கு முடிவுபெறும்? மறுபடியும் 'அவளது' ஞாபகம் வந்தது.

ஒரு நாள் அவன் முகம் வாடியிருப்பதைக் கண்டு ஏனென்று ஷ்யாமி வினவினாள்.

''ஒண்ணுமில்லே ஷ்யாமி.''

''சொல்றதில்லேயே என்னவோ இருக்கு. நான் தெரிஞ்சுக்கக் படாதோ?''

''ச்சே... அப்படியெல்லாம் ஒண்ணு மில்லே. ஆபீஸ்ல கொஞ்சம் சிக்கல்.



திடீரென்று அவள் சிரித்தாள். ''இதுக்கா இவ்வளவு வாட்டம்? யாருக்குச் சிக்கல் இல்லே ஒருவகையில் வாழ்க்கையை அர்த்த முள்ளதாக்குகிற விஷயங்களே பிரச்னைகள் தான். ப்ளீஸ் பி ஃப்ரீ.''

அதன் பின் அவளது சிநேகிதம் இருந்த வரைக்கும் ஆபீஸ் பிரச்னைகள் அவனைக் கவலைப்பட வைத்ததில்லை. கவலைகளை வாங் கிக் கொள்கிற புன்னகையுடைய பெண் ணொருத்தியின் சிநேகிதம் எவ்வளவு மகத் தானது!

'இப்ப எங்கே இருக்கே? என்ன செய்யறே? டிரான்ஸ்ஃபர் வாங்கிக் கொண்டு போனவனை எங்கே காணோம்? எனக் கவலைப்பட்டுக் கொண்டிருப்பியோ? நம்பிக்கை கொஞ்சம் கொஞ்சமாய்ச் சிதைந்து போயிருக்குமோ? காதலைப் போலவே பிரிவையும் முதலில் வெளிப்படுத்த முடியாத கோழை என்று ஒதுக்கி யிருப்பியோ? உன்னைப் பார்க்க வேண்டுமடி. பார்த்து இரண்டு வார்த்தை பேசி, மறுபடியும் உன் முகத்தை மனத்தில் பதித்துக்கொண்டு, ஷ்யாமி....

காதலித்ததும், கல்யாணம் பண்ணிக் கொள்ள முடியுமென்று அசட்டுத்தனமாக நம்பியதும், அவளையும் நம்ப வைத்ததும் அப்பாவின் — ஜாதிக்காரர்களின் 'ப்பூ' வென்ற ஊதலில் மிரண்டு போய் இன் னொருத்திக்கு மாலையிட்டதும் — ஆறு வருடங் களில் என்னவெல்லாம் நடந்து விட்டது! என்னை மன்னிப்பாயா ஷ்யாமி?

ஆபீஸ் முடிந்தது.

மாலையில் வீடு திரும்பியதும் அன்றைக்கு வெள்ளிக் கிழமை என்பதை ஞாபகப்படுத்தி னாள் மங்களம். கோவிலுக்குப் போக வேண் டும் என்றாள். அவளது பிடிவாதங்களுக்கு அவன் வளைந்து கொடுக்கிற சங்கதிகளில் இதுவும் ஒன்று. விருப்பமோ இல்லையோ போய்த் தீர வேண்டும். கிளம்பினான்.

கோவிலில் காற்று சிலுசிலுவென்று வீசி யது. நுழைவு வாயிலைத் தாண்டியதும் அகன்ற பிராகாரம், மண்டபங்கள், கும்பல் நிறை யவே இருந்தது. மல்லிகைப் பூ மணமும், புதுப் புடவைகளின் மொட மொடப்பும்...

தான் முதன் முதலாக ஷ்யாமியை அதே கோவிலில் சந்தித்தது ரவீந்திரனுக்கு ஞாப கம் வந்தது.

''அப்பப்பா... எவ்வளோ பெரிய கோயில்? எந்த ராசா கட்டினது?'' என்று கேட்டாள் மங்களம்.

''கட்டினவனுக்கு மட்டுமில்லே. வர்றவங்களுக்கும் பெரிய பெரிய சரித்திரம் இருக்கு! நீ போய்ட்டு வா'' என்றான் ரவீந்திரன்.

''நீங்க?''

''நான் இங்கேயே உட்கார்ந்திருக்கேன்.''

''இதென்ன கோயிலுக்குள்ளே வந்துட்டு சாமி கும்பிடாம? வாங்க....''

''மனசு சரியில்லே. நீ போய்ட்டு வா.''

என்ன புரிந்து கொண்டாளோ ''அப்ப இவனையும் வச்சுக்குங்க'' எனக் கைக் குழந் தையை அவனிடம் கொடுத்துவிட்டு, தான் மட்டும் உள்ளே போனாள்.

ரவீந்திரன் அம்மன் சந்நிதிக்கு எதிரிலிருந்த மண்டபத்துக்குள் வந்தான். சிறிய மண்டபம் அது. சிங்க முகத்தில் தாங்கி நிற்கிற தூண்கள், விளக்கு மாடம். உத்திரத்தில் ஏதோ ஒரு காலத்தில் வரையப்பட்ட சித்திரத்தின் மிச்ச சொச்சங்கள். வலது மூலையில் படிக்கட்டு. வெளியிலிருந்து வருகிறவர்களுக்குச் 'சட்'டென்று பார்வையில் படாத இடம் அது. ஷ்யாமியும் அவனும் அங்குதான் முதன் முதலில் சந்தித்துப் பேசிக் கொண்டார்கள்.

இன்னது பேசுவது என்று தெரியாமல் அப்படிப் பேசிக் கொள்வது கூட அவசியமில்லாமல், ஒருவரை ஒருவர் பார்த்து. சிரித்து. 'புதையல் எடுத்த பரவசமாய்..

ரொம்ப நேரம் கழித்து, ''இப்படி வெறுமனே உட்கார்ந்திருக்க நாம் வந்திருக்க வேண்டியதில்லை ஷ்யாமி'' என்றான் அவன் வேண்டுமென்றே.

''ஏன்... என்ன கெட்டுப் போச்சு இப்ப?''

''ஏதாச்சும் பேசேன். உன் குரலை நான் கேட்க வேண்டாமா?''

''பேசறதை விடப் பேசாம விடற சங்கதிகளுக்குத்தான் அர்த்தம் அதிகம். தெரியுமா உங்களுக்கு?''

''இப்ப என்ன அர்த்தத்தை எனக்குப் புரிய வச்சுட்டீங்க அம்மணி?''

''சிக்கலான ஒரு வியாதியை..'' ஷ்யாமி எதிரே இருந்த கல் தூண் ஒன்றைக் காட்டுகிறாள். ரதி — மன்மதன் சிலை. இருவருக்கும் சிரிப்பு வந்து விடுகிறது.

நேற்றைக்குத்தான் நடந்த மாதிரி இருக்கிறது. ஆறு வருடங்களாகி விட்டது!

கையில் குழந்தை சிணுங்கியது. கோவிலுக்குள் சென்ற மங்களம் இன்னும் திரும்பி வருவதாகக் காணோம். ரவீந்திரன் குழந்தைக்கு 'ஜோ...ஜோ' காட்டிக் கொண்டு உலாவினான்.

அம்மன் சந்நிதிக்கு அருகே வந்தபோது, ''தம்பி... சௌக்கியமா?'' என்று ஏதோ தெரிந்த குரல். திரும்பினான்.

அருகில் ஒரு பெரியவர் நின்று கொண்டிருந்தார். பஞ்சாய் நரைத்த தலை. முகத்தில் ஒரு வார ரோமம். எண்பதுக்குக் குறையாது. எங்கோ பார்த்த முகம்.

''அப்பவே பார்த்துட்டேன். தம்பிதானான்னு. சந்தேகம். ரவீந்திரன்தானே?''

''ஆமாம். நீங்க?''

''மறந்தாச்சா? உங்க ரூமுக்கு எதிர்ல இருந்தேனே பெட்டிக் கடை வச்சுக்கினு.'

''ஓ...தாத்தாவா?'' ரவீந்திரனுக்கு ஞாபகம் வந்து விட்டது. ஒரு வகையில் அவன் ஷ்யாமியைக் காதலிக்க அவரது கடைதான் காரணம் என்று சொல்ல வேண்டும். அவளது வீடு அதை ஒட்டித்தான் இருந்தது. கடைக்குப் போக வரப் பார்த்து. பழகி... எப்படி மறந்துவிட முடியும்?

எப்போதோ காணாமல் போன குழந்தைக்குத் திடீரென விலாசம் கிடைத்த மாதிரி இருந்தது அவனுக்கு. ஆறு வருஷ சங்கதிகளை ஒரே மூச்சில் விசாரித்தான். பதிலுக்கு ஒன்றிரண்டு விஷயங்களை அவரும் கேட்டறிந்தார். ஷ்யாமியைப் பற்றி அவர் சொன்ன செய்தி அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

அவன் டிரான்ஸ்ஃபர் வாங்கிக் கொண்டு போன மறு வருடமே அவளுக்குக் கல்யாணம் ஆகிவிட்டதாம். மாப்பிள்ளை ஏதோ தொழிற்சாலையில் வேலை பார்த்தானும். சந்தோஷமாகத்தான் குடும்பம் நடத்தினார்களாம். இரண்டு குழந்தைகள். பாவி மகன் பொசுக்கென்று போன வருடம் ஒரு விபத்தில் போய்ச் சேர்ந்து விட்டானும். பாவம், ஷ்யாமிதான் இப்போது வேலைக்குச் சென்று குழந்தைகளைக் காப்பாற்றுகிறாளாம்.

''கஷ்ட ஜீவனம்தான் தம்பி. அவ புருஷனுக்கு உங்க ஆபீஸ்ல இருந்துதான் ஏதோ பணம் வரணும்னு சொல்றாங்க. கடவுள்தான் உங்களைக் கொண்டு வந்து விட்டிருக்கு. ஏதோ ஒரு வழி பண்ணினாப் புண்ணியமாப் போகும் தம்பி. இப்பக்கூட நானும் அதும் தான் கோவிலுக்கு வந்தோம். அர்ச்சனை பண்ணணும்னு உள்ளே நிக்குது. நான் உங்களைப் பார்க்கவும் ஓடியாந்தேன்.'' சொல்லிவிட்டுத்தாத்தா அவனைப் பார்த்தார். ஆழ்ந்த பார்வை -- தனது சொல்லுக்கு அவனது பாதிப்புக்களை அளவெடுப்பது போல.

நர்ஸ்: ''உங்க மனைவிக்கு ஒரே நேரத்தில் மூணு குழந்தைகள் பொறந்திருக்கு...''

இவர்: ''ஐயோ ஒரு குழந்தைக்குத் தானே பள்ளியில் அட்மிஷன் வாங்கியிருக்கிறேன்!'' -சோமசுந்தரம்



''ஷ்யாமியா? இந்தக் கோயிலிலா? வாங்க தாத்தா பார்க்கலாம்.''

பொத்துக் கிளம்பிய உந்துதலில் ரவீந்திரன் அவரையும் இழுத்துக் கொண்டு உள்ளே ஓடினான்.

சன்னதிக்கு முன்னர் நிறைய முகங்கள். குங்குமத்துடன். இல்லாமல். கறுப்பாய், வெளுப்பாய், மஞ்சளாய்....

''அதோ... பச்சைச் சேலை கட்டி நிக்குது பாருங்க ஷ்யாமி.''

தாத்தா சுட்டிக் காட்டிய இடத்தில் அவனது ஷ்யாமி இல்லை. ஏதோ ஒரு நடுத்தர வயது மாது நின்றிருந்தாள்.

''தாத்தா?''

'அதான் தம்பி...அடையாளம்தெரியலே?''

ரவீந்திரன் மறுபடியும் பார்த்தான். 'பளிச்'சென்று இல்லாமல் ஏதோ அடையாளம் புரிந்தது. அது ஷ்யாமியா? அவளது முகம்தானா இது? நிஜமாகவா? இது என்ன கோலம்? அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. உருக்குலைந்து போயிருந்தாள். சிரிப்பும் புன்னகையும் மறைந்து முகத்தில் நிரந்தர சோகம் படர்ந்திருந்தது. வற்றலாய் உலர்ந்த சரீரம். எங்கிருந்து இத்தனை கறுப்பு வந்தது? குச்சி குச்சியாய்க் கையும் காலும்.. ஷ்யாமி!

''எப்படி இருந்த பொண்ணு... கஷ்டத்தில் கொஞ்சம் கொஞ்சமாய் அழிஞ்சுக்கிட்டு வருது தம்பி.''

'பொட்'டென்று அவனுள் ஏதுவோ உடைந்து போனது. மனத்துக்குள் பதிந்து வைத்திருந்த பிம்பம் ஒரே வீச்சில் கலைந்து விட்டதாகத் தோன்றியது.

இவள் ஷ்யாமி இல்லை. யாரோ ஒருத்தனின் மனைவி. விதவை. எனக்கும் இவளுக்கும் யாதொரு சம்பந்தமும் கிடையாது.

அவன் திரும்பிவிட முயன்றான்.

''இரு தம்பி... சியாமளா வந்துடட்டும்'' பெரியவர் வேண்டினார்.

''வேணும் தாத்தா... நான் போறேன்.''

''என்ன தம்பி... ஒரு வார்த்தை கூடப் பேசாமல்...?''

''பேசாம விடற சங்கதிகளுக்கு அர்த்தம் அதிகம் தாத்தா!'' அவனுக்குத் தொண்டை கம்மிற்று. ''அவளை இனிமே ஆபீசுக்கும் வரவேண்டாம்னு சொல்லிடுங்கோ. பணம் கிடைக்க நான் ஏற்பாடு பண்ணறேன்.''

''புண்ணியம் கிடைக்கும் தம்பி'' பெரியவர் கையெடுத்துக் கும்பிட்டார்.

ரவீந்திரன் அவசரமாய் வெளியே வந்தான்.

நிஜமாகவே அவள் ஷ்யாமிதானா?

ஒப்பிட்டுப் பார்க்க விரும்பியவன் போல் மனத்திலிருந்த முகத்தைத் தேடினான். தேடுதலுக்குள் அகப்படாமல் 'பொசுக்'கென்று அது எங்கோ ஒளிந்து கொண்டது. பதிலுக்குக் குச்சி குச்சியான உடம்புடன் உலர்ந்த முகம் ஒன்றும் மெல்ல மெல்ல முளைத்து வந்தது. இனி பழைய முகத்தைக் காணவே முடியாது என்கிற நிதர்சனத்துடன் விகவரூபமாய்....

தான் எதை இழந்திருக்கிறோம் என்பதை உணர உணர, வாய் விட்டு அழவேண்டும் போலிருந்தது அவனுக்கு.



The fragrance of choice coconuts in every drop.
Yendelux
coconut oil
என்டிலக்ஸ்
தேங்காய் எண்ணை
15, 4 கிலோ டின்களிலும் 1 கிலோ 500, 200 கிராம் பாலிதின் பாட்டில்களிலும் கிடைக்கிறது.
மு: மு. நாகலிங்க நாடார் சன்ஸ்
உரிமையாளர்கள் :
ஸ்ரீ நாகலிங்க விலாஸ் ஆயில் மில்ஸ்
கொல்லம்—கேரளா
போன் : ஆபீஸ் : 2244, 4484, மில்ஸ் : 2266, 4611
Trade Enquiries Solicited from wholesale dealers only

# கிளி

**ஜெயந்தன்**



4

வாழ்க்கை தன்னை இவ்வளவு நிர்தாட்சண்ய மாக, கொடூரமாக எதிர் கொண்டிருக்கும் போது...

அங்கே பஸ்ஸை விட்டிறங்கி, இதோ சந்திக்க வேண்டிய நொடி வந்து விட்டது என்று உணர்வாகியபோது கலோசனாவுக்குக் கால்கள் மெல்ல நடுங்கின.

இவ்வளவு பலவீனமான தான் எப்படிக் காதலிக்கப் போனாள்? அவன் உச்சம் வரை போனாள்? எது அதுவரை தன்னை இழுத்துச் சென்றது?

இல்லை. காதலோ, தான் காதலித்ததோ தவறானதாக இருக்க முடியாது. ஒரு மோசக்காரனைப் புரிந்து கொள்ளும் சக்தி தனக்கு இல்லாமல் போய்விட்டதுதான் தவறாக இருக்க முடியும். அண்ணன் கூட சட்டப் படிப்பில் இருப்பதாகச் சொல்வான், Innocency is also a crimeஎன்று. அறியாமையும் ஒரு குற்றம்தான். வெறும் வெள்ளைத் தாளின் அடியில் கையெழுத்துப் போட்டுத் தருவது எதிராளி தன் தலை மேல் எந்தப் பாறையையும் போட அனுமதி தருகிற காரியம் என்பதை ஒருவன் அறியாதிருப்பானானால் அதற்குரிய தண்டனையாகப் பின்னால் அதில் எழுதப்படுகிற ஒவ்வொரு வரிக்குமுள்ள விலையை இவன் கொடுத்துத்தான் ஆக வேண்டும்.

இருந்தாலும் தன் அறியாமை இவ்வளவு அதீதமாகவும் இருந்திருக்கக் கூடாது. ஒரு வருஷமாகப் பேசிப் பழகியவனுக்கு அவன்மேல் ஒரு துளிசந்தேகம் வந்ததில்லையே! இல்லை. இல்லை. அவன் அவ்வளவு கபடமானவன். வேஷதாரி. இவனால் தன்னை மட்டுமல்ல, எந்தப் பெண்ணையும் வெகு சுலபமாக ஏய்த்து விட முடியும். இதோ பக்கத்தில் வருகிறாளே, இவளே, தான் இல்லாவிட்டால் அந்த இடத்தில் இருந்திருப்பாள். அடேயப்பா, அவன் எப்படி மனத்தைச் சுகந்தம் தடவிய விரல்களால் வருடி வருடிப் பேசினான்!

இந்த நிலையிலும் அப்படியொரு சந்தோஷம் நினைவுக்கு வரவே அவள் தன்மேலேயே எரிச்சலுற்று அதை உதறி அதற்குப் பிராயச்சித்தம் போல் இப்படி நினைத்தாள். 'ம்... ஒரு நாளைக்கு அண்ணன் ரிவால்வர் கொண்டுவரும்போது தெரியாமல் அதை எடுத்து வைத்துக் கொண்டு நேரே அவனிடம் போய்...

னாகும்...அதெல்லாம் நடக்கிற காரியம் இல்லை. தன்னால் அப்படியெல்லாம் செயல் பட இயலப் போவதில்லை. அதெல்லாம் பெண்களுக்குக் கதைகளிலும் சினிமாக் களிலும்தான் சாத்தியம். அப்படியே கட்டாலும் கட்டுவிட்டு வாழ்நாளெல்லாம் மூக்காடு போட்டுக்கொண்டு உட்கார்ந்திருப்பதா என்ன?

ஒருவேளை சற்றுமுன் இவளது அறையில் வந்துபோன யோசனைகளில் ஒன்றான 'கட்டாயக் கல்யாணம்' நல்ல ஏற்பாடாக இருக்குமா? அதை மறுபரிசீலனை செய்து பார்க்கலாமா? அவனை எப்படிக் கட்டாயப்படுத்த முடியும்? அதற்கெல்லாம் மசிகிற ஆளா? தவிர, கட்டாயப்படுத்திய ஒரு சேர்க்கை வாழ்க்கையாக இருக்க முடியுமா? நாளை, தனக்கு மட்டுமல்ல, தனது குடும்பத்துக்கே ஒரு தலைவலியாய்ப் போய்விடுவான்.

நூலகத்துக்குப் பிரியும் மூலை வந்தபோது நளினி, ''சரிபோ, சுலோசனா. பயப்படாதே. துணிஞ்சு. பிசிறு இல்லாம அடி. வேறே வழியில்லே'' என்று மெல்லிய குரலில் சொல்லிவிட்டுப் பிரிந்தாள். ''நான் சரியா எட்டு மணிக்கு வந்துடறேன்.''

வரும்போதே சுலோசனா வீட்டைக் கற்பனை செய்து பார்த்தாள். நடு ஹாலில் நாயனா வழக்கத்துக்கு மாறாக, பேப்பர் புத்தகம் எதுவும் படிக்காமல் சாய்வு நாற்காலியில் தலையைக் கவிழ்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார். அம்மா அவருக்கு வலப்புறம் தரையில் உட்கார்ந்து வாசலைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள். அக்கா சமையல் கட்டிற்கு வழி காட்டும் நிலைப்படியில் சோகம் காக்கிறாள். அண்ணன் அந்த அறையின் தெற்குச் சுவரோரம் கிழக்கு மேற்காக உலாத்திக் கொண்டிருக்கிறான். தங்கைகள் விஜயா, செல்வி தம்பி கிட்டு இவர்கள் மேலே படித்துக் கொண்டிருக்



கிறார்கள். அவர்கள் இந்த விசாரணையின் போது இங்கு இருக்க வேண்டாமென்று அவர்களை அங்கே அனுப்பி விருக்கிறார்கள்.

இவளைக் கண்டதும் அம்மா 'எங்கேடி போனேன்னு சொன்னே?' என்று பல்லைக் கடித்தபடி கேட்கிறாள். அண்ணன் நின்று திரும்பி முறைக்கிறான். அக்காள் தலையைக் கவிழ்த்துக் கொள்கிறாள். நாயகனின் கவிழ்ந்த தலை மேலும் தாழ்கிறது.

இன்னொரு காட்சி: இழுத்துக் கீழே தள்ளித்தரையில் உருண்டு கிடக்கும் இவளை அண்ணன் பெல்டால் விளாசுகிறான். 'சொல்லு சொல்லு' என்று. இவள் தெரியாது, தெரியாதண்ணே, ஒருத்தனையும் தெரியாது என்று கதறுகிறாள். அப்பா வந்து மகனின் பெல்ட்டை மறிக்கிறார்.

ஆனால் நிஜத்தில் இவள் வீட்டினுள் காலடி வைத்தபோது கொஞ்சம் வியக்கும் படி அந்த ஹாலில் அண்ணனைத் தவிர வேறு யாருமில்லை. அவன் மட்டும் அடித்து வைத்தது போல் உட்கார்ந்து கொண்டிருக்கிறான். இவள் வந்தது தெரிந்தும் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. இது போதாதா? இவள் கால்கள் மீண்டும் நடுங்கின.

அரவம் கேட்டுச் சமையல் அறையிலிருந்து எட்டிப் பார்த்த அம்மாவின் கண்களில் கலவரம் அகன்டு பூத்திருந்தது.



அவள் இவளைப் பார்த்து 'இங்கே வா' என்று சைகை காட்டினாள். அக்காள் ஜானகி அவள் பின்னால் நின்று கொண்டிருந்தாள். இவள் அங்கே சென்றபோது அம்மா ஒன்றும் பேசாமல் காப்பி எடுத்துக் கொடுத்தாள்.

'குடி'.

சரி. இவர்களாகத் தொடங்கட்டும். அது தான் தனக்குப் பத்திரம் என்று சுலோசனா வும் பேசாமல் காப்பியைக் குடிக்க ஆரம் பித்தாள்.

பாதிக் காப்பியில் அம்மா சொன்னாள்: ''இப்ப, விட்டா, ஒன் அண்ணன் ஒன்னைக் கடிச்சுத் துப்பிடுவான். அவ்வளவு ஆத் திரத்தில இருக்கான்.''

ஆ! இது நடிக்க வேண்டிய நேரம். முழு மூச்சாக இரண்டிலொன்று என்று நடித்துப் பார்த்துவிட வேண்டிய நேரம். இல்லையேல் உண்மையின் அடியில் சிக்கி நசுங்கிப் போக வேண்டும்.

இவள் 'வியப்போடு' 'ஏம்மா?' என்றாள்.

இதைக் கேட்டு அம்மா திடீரென்று தயங்கினாள். இவள் நடிப்புக்கு முதல் வெற்றியாக.

சுலோசனா திரும்பக் கேட்டாள்: 'ஏம்மா?'

''நீ யாரோ தாடிக்காரன் கூட ஊர் சுத்திரியாமில்ல?''

இவளுக்குச் சட்டென்று 'கோபத்தில்' மூக்கு விடைத்தது. ''நீ என்னம்மா சொல்றே?''

அம்மா பயந்து, பின்வாங்கிவிட்டாள். அவள், பொறுப்பிலிருந்து தன்னைக் கத்தரித் துக்கொண்டு, ''நானா சொல்றேன். எவனோ சொல்லியிருக்கான். இது மட்டுமா, அது என்ன சொல்றது, லாட்ஜா, லாட்ஜுக் கெல்லாம் நீ அவனோட போனியாம். இதை யாரோ'' என்றவள், ஜானகியைக் காட்டி ''இவளுக்குப் பார்த்த மாப்பிள்ளை வீட்ல சொல்லியிருக்காங்க. இப்ப அவங்க அப் பிடியாப்பட்ட வீட்ல பொண்ணு வேணாங் கறாங்களாம்'' என்றாள்.

''இதை யாரு சொன்னது?''

''சொன்னது யாருன்னு எனக்கென்னடி தெரியும்? காலையில செல்லையா வந்தாரு. அவங்களை ரொம்ப ஆசை பிடிச்ச ஆட்டுது. அவங்களுக்குத் தீனி போட நம்மாலே ஆகாதுன்னு தெரிஞ்சுக்கிட்டு என்னமோ ஜாதகம் கீதகம்னு சொல்லி மழுப்புறாங்க. விடுங்க, வேறே எடம் பார்த்துடுவோம்னு சொல்லிட்டுப் போனாரு. அப்புறம் என்ன டான்னா இன்னொரு தரகன் சாமிக் கண்ணு இவன் கிட்டப் போயி இப்பிடிச் சொல்லி யிருக்கான். இவன் என்ன டான்னா இங்கே வந்து, 'அதுக்குத் தான் பொட்டச்சிங்களை வேலைக்கு அனுப்பக் கூடாதுன்னு தடுத்தேன். கேட்டீங்களா?'ன்னு குதிச்சுட்டுப் போனான். அப்புறம் ஒன் ஆபீசுக்கு வந்து பார்த்துட்டு நீ இல்லாம வந்து அதுக்கு ஒரு குதி குதிச்சுட் டுப் போனான். இப்ப வந்து ஒரு மணி நேரமா அப்பிடியே புடுச்சி வச்ச மாதிரி உக்காந்திருக்கான்.''

சுலோசனா விருட்டென வெளியே வந் தாள். ஹாலில் அண்ணன் முன்நின்று

மொட்டையாக ''எவன்னே சொன்னான்?'' என்றாள். இதைக் கேட்ட ரங்கையா நிதான மாக நிமிர்ந்து அவளைப் பார்த்தான். ஆனால் உள்ளே எள்ளும் கொள்ளும் வெடித்துக் கொண்டிருப்பது கண்களில் தெரிந்தது.

''என்னண்ணே, எவன் சொன்னான்?''

''ஏன், அவனைச் சிரச்சேதம் பண்ணப் போறியா?''

''நீ என்ன பேசறே? எவன் தங்கச்சியைப் பத்திடா பேசறேன்னு ஜோட்டால அடிச்சு வராம இங்கே வந்து குதிச்சியாமில்லே?''

''அடிக்கிறது, புடிக்கிறது இருக்கட்டும். உண்மை என்ன? அதற்குப் பதில் சொல்லு.''

கவோசனா ஒவ்வொரு சொல்லுக்கும் ஒரு தலை உருள வேண்டும் போல அடித்தாள். Rediculous baseless concocted stupid''

ஆனால் ரெங்கையா பழைய பார்வை யைத்தான் பார்த்தான். இவன் அம்மா இல்லை. இவன் போலீஸ் ஆபீசர். எத்த னையோ கல்லுளிமங்கன்களைப் பார்த்தவன்.

''பேரைச் சொல்லட்டுமா?''–குரல் அமை தியாக அதட்டியது.

தங்கைக்கும் அண்ணனைத் தெரியும். அவன் போலீஸ் வேலையும் தெரியும். அவள் துணிந்து ''ம்... சொல்லு'' என்றாள்.

''சத்தியம் செய்வியா?''

''எந்தக் கோயிலுக்குப் போகணும்?''

''மனச்சாட்சி கோயிலுக்கு.''

''ம்... மனச்சாட்....''' எங்கோ நெஞ் சில் விட்டு உருவியது. தரகர் செல்லையா படி தாண்டி வந்து கொண்டிருந்தார்.

இதற்குள் கொல்லைப்புறமிருந்து திரும்பி யிருந்த நாயினா அவரை ''வாங்க'' என்று வரவேற்றார்.

கவோசனா அயர்ந்து போனாள். இது வரைசரி. ஆனால் உண்மை அறிந்திருக்கிற ஒரு ஆளின் முன்பே எப்படி நடிப்பது? ஒருவேளை இவர், 'என்னம்மா காலையில நீ எங்கிட்டே ஒத்துக்கிட்டே?' என்று சொல்லிவிட்டால்? அவள் மறுபடியும் சுதா ரித்துக் குவிந்து கொண்டாள். அப்படிச் சொன்னால் இவரையும் 'பொய்யர்' பட்டிய லில் சேர்த்துவிட வேண்டியதுதான்! 'எப்பச் சொன்னேன்? என்னு எல்லாரும் சேர்ந்து சதி பண்றீங்களா' என்று அலறிவிட வேண்டியது தான். என்ன செய்வது? வாழ்க்கை தன்னை இவ்வளவு நிர்தாட்சண்யமாக எதிர்கொண் டிருக்கும்போது தானும் அதை அப்படியே அதே விதத்தில் எதிர்கொள்ள வேண்டியது தான்.

செல்லையா வந்திருப்பதை அறிந்த அம்மா வெளியே வந்து, அவர் உட்காரத் துவங்கும்போதே, ''என்னுங்க இது அநி யாயமா இருக்கு. இவங்க பொண்ணு எடுக்கவேண்ணு நாம என்னு மண்ணையா வாரித் தூத்தப் போறோம்? எதுக்காவ இப்பிடி இவங்க சும்மா இருக்கப் பொண்ணைப் பத்தி தூத்தி விடறாங்க'' என்று புலம் பினாள்.

அவள் சொல்வதைக் கேட்டபடியே உட்கார்ந்த செல்லையா ஒரு பத்து விநாடி யாவது இருக்கும், அப்படியே தலை தாழ்த்திக் கண் மூடியபடியே இருந்தார். அவர் அப்படி இருந்தது காற்றில் ஏதோ அந்தரங்க மாய் ஒரு செய்தி வருவது போலவும் இவர் அதை மற்ற புலன்களை எல்லாம் மூடிவிட்டுச் செவியை மட்டும் திறந்து கிரகிப்பது போல வும் இருந்தது.

பின் அவராகப் பேசத் தொடங்கினார். வெகு நிதானமாக, ஒவ்வொரு சொல்லுக்கு இடையிலும் ஒரு விஞ்ஞானக் கணக்குப் பூர்வமான இடைவெளி இருப்பது போல வும், தொடர்களை அந்தக் கணக்கு தவறா மல் இடைவிட்டு உச்சரித்தால் அர்த்த வெளிப்பாடுகள் பன்மடங்கு பரிமாணப் படும்; அந்த இடைவெளிகளும் ஒரு வகை யான சொற்களே என்பதை யெல்லாம் கவ னத்தில் வைத்துக் கொண்டு தவற விடாமல் பேசுவது போலப் பேசினார்.

''நான் அங்கே இருந்துதாம்மா வர்றேன். எனக்கு மட்டும் இது அதிர்ச்சி யில்லியா? ஆனால் எஸ். ஐ. சொன்னதும்தான் எனக்குத் தெரியும். நான் நேராவே போய்க் கேட் டேன். கேட்டு என்ன பிரயோசனம்? அகப்பட்டுக்குவாங்களா என்ன? நாங்க எங்க சொன்னோம், யாருகிட்டச் சொன் னோம்னு ஆரம்பிச்சுட்டாங்க. அவங்க ஜாதகம் ஒத்து வரல்லேன்னுதான் சொன் னாங்களாம்.'' என்றவர் பின்னும் குரலை இறக்கிக் கொண்டு பேசினார். ''இன் னொரு விஷயம்மா. அதை நாம ரொம்ப யோசிக்கணும். வேஷ்டி வேலியில விழுந் தாலும் சரி, வேலி வேஷ்டியில விழுந் தாலும் சரி, வேஷ்டிக்குத்தான் சேதாரம் இல்லிங்களா? பொண்ணு நம்ம பொண்ணு. நாமலே கோபத்துலே நாலு பேத்துக்கிட்ட இதைக் கொண்டு போயிட்டோம்னு என் னாகும்? அவன் அவன் எதையும் உக்காந்து ஆராய்ச்சியா பண்ணிக்கிட்டு இருக்கான்? அவ னவன் போற வேகத்தில அன்னாம கொறை யுமா இல்லாமப் புகையுமானு சொல்லிப் போய்க்கிட்டே இருப்பான். நாளைக்கு எடுக்க வேண்டியவனுக, அது நெஜமோ பொய்யோ நமக்கு வேண்டாமேன்னு போயிடுவாங்க. பொண்ணு நம்ம பொண்ணு. அது இல் லேன்னு சொல்லிட்டப்புறம் நாம விட்டுற ணும். இவனுகதானா ஊர்ல ஒரே குடும்பம். எவ்வளவோ தங்கமான இடமெல்லாம் இருக்கு. நாம பார்த்துட்டுப் போறோம்.''

கவோசனாவுக்குத் தான் மீண்டும் பிறந் தது போலிருந்தது.

''ஓட்டப் பந்தயத்திலே முதல்பரிசைத்தட்டிட்டுப் போயிட்டான்னு அந்த ஆளை ஜெயில்லே தள் ளிட்டாங்க ஸார்...!''

''பரிசு இல்லே கொடுத்து இருக்கணும்...?''

''எப்படி கொடுக்கறது...? அதைத்தான் அவன் தட்டிட்டுப் போயிட்டானே...!'' - ழீல்பேர்



# ஜலதோஷம் உங்கள் நாளையே கெடுக்க அனுமதிக்காதீர்கள்



### ஜலதோஷத்தைப் போக்கலாம்

நல்ல ஒரு நாளையே கெடுக்கும் மூக்கு ஒழுகுதல் அல்லது மூக்கடைப்பு, தலை கனம், தொண்டைக்கட்டு மற்றும் மார்சளி போன்றவற்றுடன் உள்ள ஜலதோஷத்திலிருந்து நிவாரணம் பெற ஒரு வழி இருக்கிறது.

### ஜலதோஷ மருந்து கொண்டு தாக்கிடுங்கள்

மற்ற உபாதைகளைப் போன்றே இதற்கும் சிகிச்சையளித்தால் போதாது. பாதிக்கப்பட்ட பாகங்களி லெல்லாம் ஒரே சமயத்தில் செயல் புரியவல்ல விசேட ஜலதோஷ மருந்தையே உபயோகியுங்கள்.

### கோல்டரின் ஜலதோஷத் திற்கு மட்டுமே

உங்கள் சுறுசுறுப்பைக் கெடுக்கும் அறிகுறிகள் அனைத்தையும் போக்கு கிறது—கோல்டரின். இதிலுள்ள விசேட மருந்துப் பொருட்கள் ஜலதோஷத்தினால் பாதிக்கப்பட்ட எல்லா பாகங்களிலும் ஒருங்கிணைந்து செயல்புரிகின்றன. அதோடு, ஜலதோஷ எதிர்ப்பு சக்தியை வளர்த்திட இதில் வைட்டமின் C உள்ளது.

ஜலதோஷத்தினால் பாதிக்கப்படும் போது ஜலதோஷ மருந்தையே சாப்பிடுங்கள்.

# கோல்டரின்

விசேட ஜலதோஷ மருந்து

CASBC-64-172 TM

''எல்லாரும் இதை, இதோட விடுங்க. ஒரு காப்பி கொண்டாங்கம்மா.''

ஜானகி காப்பி எடுக்கப் போனாள்.

அம்மாவுக்கும் நாயனாவுக்கும் இது உடன்பாடுதான். ஆனால் ரெங்கையாதான் இன்னும் இறங்கவில்லை போலிருந்தது.

''கலாசனா!'' — ரெங்கையன் கூப்பிட்டான்.

''என்னண்ணா?''

''நாளையில இருந்து நீ வேலைக்குப் போகலே!''

''சரி.'' — பதில் அட்டியின்றி வந்தது. தயக்கம் அவன் கோபத்தை உசுப்பி விடலாம். ஏதாவது சொல்ல வேண்டியிருந்தால் பிற்பாடு வைத்துக் கொள்ளலாம்.

''செல்லையா, நீங்க இவளுக்கும் ஒரு மாப்பிள்ளை பாருங்க. ரெண்டு கல்யாணமும் ஒரே முகூர்த்த நேரத்துல நடக்கட்டும்.''

''ஆகட்டும்.''

''அம்மா இவருகிட்ட ஒரு நூறு ரூபா குடு'' — ரெங்கையா எழுந்தான்.

நளினி எட்டு மணிக்கு வந்தபோது அவள் ஆச்சரியப்படும்படி வீடு வெகு சாதாரணமாக இருந்தது. அவளைத் தன் அறைக்கு அழைத்துப் போன கலாசனா, சாதாரணப் பேச்சுக்களோடு இதை எழுதிக் காட்டினாள்.

விஷயம் பாதகமில்லாமல் முடிந்துவிட்டது. விவரம் நாளை சொல்கிறேன்.

இரவு ஏன் வருகிறது? பகலெல்லாம் வாழ்க்கையோடு, அது வேறு தான் வேறு இல்லையென்று கட்டிப் புரளும் மனிதன் அந்த நாளின் முடிவில் அதிலிருந்து தன்னைப் பிய்த்துத் தனியேயும் தூரமாகவும் வைத்துக் கொண்டு அந்த வாழ்க்கை பற்றிய ஒரு விமரிசனத்தைச் செய்து கொள்ளத்தானே?

இடி விழுந்தது போன்றதொரு ஏமாற்றத்தில் பொடிந்து போய் நின்றவள் — முகட்டிலிருந்து நழுவி அலங்க மலங்கச் சரிந்து பாதாளத்தில் விழுந்தபோதும் நொடியில் சுதாரித்து எழுந்து தட்டித் துடைத்துக் கொண்டு நடந்தவள் — பொய்க்கு எதிர் மருந்தாகப் பொய்யையே கேடயமாகவும் ஆயுதமாகவும் தரித்துக் கொண்டு அம்மாவிடம் அப்பாவிடம் அண்ணனிடம் அந்தச் செல்லையாவிடம் நடித்துக் காட்டியவள் எல்லாம் தான்தானா?

எந்த மரணமே இல்லாத நித்திய வாழ்க்கை பறிபோய்விடக் கூடாது என்பதற்காக இத்தனை பொய்களைச் சொன்னாள்? இந்த இருளில் துச்சமாகத் தெரியும் அந்த வாழ்க்கை வெளிச்சத்தில் எப்படிப் பிரிக்கவே முடியாத ஓர் உயிராகத் தெரிந்தது. அவள் அழுது தீர்த்தாள்.

தனது அசிங்கமான பொய்களையும் நடிப்பையும் அவர்கள் அப்படியே ஏற்றுக் கொண்டு விட்டார்களா என்ன? அண்ணன் இன்னும் நம்பவில்லையே. ஒருவேளை அவனுக்கு உண்மையிலேயே 'பேர்' தெரிந்திருக்குமோ: நாயனாதான் என்ன சாதாரண ஆளா? அசைகிற காற்றை வைத்தே வருகிற ஆள் யாரென்று கண்டுவிடும் ஒரு துறையில் பேராசிரியராக இருந்தவராயிற்றே! அம்மாவும் அக்காவும் மிக மிகச் சாதாரணங்கள் போல் தெரிந்தாலும், மாலை உச்சரிக்கப்பட்டதே, அள்ளாமல் குறையாது, இல்லாமல் புகையாது என்ற வார்த்தைகள், இதன் அர்த்தம் கூடவா தெரியாது போயிருக்கும்? என்னதான் காசாசை பிடித்து ஆட்டினாலும் ஒரு பெண்ணின் மேல் இப்படி இட்டுக்கட்டி யார் பழிதூற்றுவார்கள் என்ற சந்தேகம் வராமலா போயிருக்கும்? செல்லையாவுக்குத் துல்லியமாகத் தெரியுமே.

இப்படிப்பட்டவர்கள் முன் தான் வலிந்து கட்டி வரிந்து கட்டி ஆவேசமாக ஆடிய நாடகத்தால் தன் பிம்பம் அவர்கள் கண்ணில் எவ்வளவு சிறுத்துப் பங்கப்பட்டுப் போய்க் காட்சியளித்திருக்கும்?

எவ்வளவு கேவலம்?

இவ்வளவுக்கும் காரணமான ரகு இப்போது என்ன செய்து கொண்டிருப்பான்? நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருப்பான். அல்லது இன்னொரு நேமிக்கு வலை விரித்துக் கொண்டிருப்பான்.

அவனை இப்படியே விட்டுவிடுவதா? என்ன செய்யலாம்? ஏதாவது செய்தாகவேண்டுமே?

எதுவும் செய்ய முடியாது. அவன் பெயரை உச்சரிக்கக் கூடப் பயந்துபோய், பொய் நாடகம் போட்டுச் சிறுத்துப் போன தன்னால் எதுவும் செய்ய முடியாது.

தன்னால் செய்ய இயல்வது ஒன்றே ஒன்று தான். எல்லாவற்றையும் மறந்து போவது.

அவள் பத்திரிகைகளில் மேலோட்டமாக, துணுக்குகளாக, அங்கும் இங்கும் படித்தது ஞாபகம் வந்தது. ஒன்றைத் திரும்பத் திரும்ப உச்சரித்தால் அது மனத்தில் படிந்து போகும். ஒன்றை இரவில் சலிக்கச் சலிக்கச் சொல்லிக் கொண்டிருந்தால் தூக்கம் வந்து விடும்.

'நான் ரகுவை, சகலத்தையும் மறந்து விடுகிறேன்.'

ஒரு இருநூறு தடவை சொல்லியிருப்பாள். அப்படியே தூங்கியும் போய்விட்டாள்.

ஆனால் காலையில் எழுந்ததும் முதல் நினைவாக, தான் மறந்துவிடுவதாக ஜபித்துக் கொண்டிருந்ததுதான் ஞாபகத்தில் வந்தது.

(தொடரும்)

''எந்த வேலை எப்படிப் போனாலும் கவலைப்படாம எல்லாரும் ஆபீசுக்குக் காலையிலே பத்து மணிக்கு வந்திடணும்னு உத்தரவு போட்டது, ரொம்ப தப்பாப் போச்சுது...?''

ஆபீசர்: ''ஏன் என்ன ஆச்சு...?''

''நம்ம ஹெட்கிளார்க் வீட்டிலே ஒன்பதே முக்காலுக்குக் குளிச்சிட்டு இருந்தாராம். நீங்க போட்ட உத்தரவு டக்குனு ஞாபகம் வந்ததும், கட்டிட்டு இருந்ததுண்டோட அப்படியே ஆபீசிலே வந்து உட்கார்ந்திட்டாரு பத்துமணிக்கு!''

- கமலதியாகராஜன்



# போர்ஹென்ஸ் — பல் டாக்டரால் உருவாக்கப்பட்ட டூத்பேஸ்ட்




## உங்கள் பற்களை சுத்தம் செய்யும் போதே ஈறுகளையும் வலுப்படுத்த உதவுகிறது

**ஈறு உபாதையால் ஆரோக்கியமான பற்களைக்கூட இழக்க நேரிடும்**



பல் டாக்டர்கள் கூறுகிறார்கள், உங்கள் பற்களை சரிவர சுத்தம் செய்யவில்லையெனில் பற்களையும் ஈறுகளையும் சுற்றி, மெல்லிய கிருமிகளின் படிவமாகிய ஊத்தை (Plaque) தோன்றுகிறது. இதுவே காலடைவில் பற்காறையாக மாறி, ஈறுகளை பலவீனப்படுத்தி, அவற்றைத் தள்ளுவதால் ஆரோக்கியமான பற்களும் விழுந்து விடக்கூடும். ஈறுகெட்டால் உடல் நலமே கெடும்.

**ஈறுகளுக்கு போர்ஹென்ஸ் பாதுகாப்பு**



டாக்டர் போர்ஹென்ஸினுடைய ஃபார்முலாவின் விசேட (அஸ்டிரிஞ்ஜன்ட்) சேர்க்கைப் பொருள் உங்கள் ஈறுகளை வலுப் படுத்தி ஈறு உபாதைகளைத் தடுக்க உதவுகிறது. ஆகவே, போர்ஹென்ஸ் டூத் பேஸ்ட், போர்ஹென்ஸ் டபிள் ஆக்ஷன் டூத்பிரஷ் கொண்டு பற்களைத் துலக்குங்கள் ஈறுகளைத் தேய்த்துக் கொடுங்கள்.




**போர்ஹென்ஸ்** — ஈறுகளுக்கெனவே

Regd. T.M. Geoffrey Manners & Co. Ltd.

267F-203 TAM

# நினைவெல்லாம் நித்யா 4

கதை: அபர்ணா நாயுடு சித்திரம்:




இவ பேரு நித்யா. சினேகிதன் ஒருத்தனோட அவுட்டிங் வந்திருக்கா. வந்த இடத்திலே அவன் தப்பிதமா நடந்துக்க முயற்சி செஞ்சிருக்கான். தப்பிச்சு ஓடி வந்து எனக்குப் போன் செஞ்சா. திரும்பி வர லிஃப்ட் கேட்டா. உடனே புறப்பட்டு வந்தேன். வந்து பார்த்தா...
அந்த சினேகிதன் யாரு?
அதை அவ சொல்லலே.
இப்படிப் பலபேரு கூடப் போவாளா?
நோ... அவ அந்த மாதிரி பொண்ணு இல்லே.
இதோ இப்போ வந்திருக்காளே!
அது தான் எனக்கும் புரியலே.
ரைட். கந்தசாமி! இந்த ஆளை ஸ்டேஷன்லே கொண்டு போயி உட்கார்த்தி வை. இந்த இடத்தை — சுற்றுப் புறத்தை சோதனை போட்டுட்டு வந்து மேற்கொண்டு விசாரிக்கிறேன்...
என் ஸ்கூட்டரிலே நான் போகலாமா?
ம்?... உன்னைத் தனியா அதிலே அனுப்ப முடியாது... கந்தசாமி! கூடப்போ கவனமாப் பார்த்துக்க ...அதுக்கு முன்னாடி...
ஸ்டேஷனுக்குப் போயிட்டா என்னை இவர் விடுவார்னு தோணலே. அப்புறம் என்னாலே ஒண்ணுமே செய்யமுடியாது. ஸோ... வழியிலே எப்படியாவது தப்பி ஓட முடியுமான்னு பார்க்கறது தான் சரி...
தொடரும்

# வாழ்க்கையில் உங்கள் முன்னேற்றம்



**ஒவ்வொரு கட்டத்திலும் போதிய ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கொண்டு உங்கள் முன்னேற்றத்தைப் பாதுகாருங்கள்.**

வாழ்க்கையின் அதிகரித்து வரும் தேவைகளைப் பூர்த்தி செய்ய உங்களுக்குப் போதிய ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் பாதுகாப்பு தேவைப்படுகிறது. அப்போது நீங்கள் தேர்ந்தெடுக்க பலவகைப்பட்ட எல்ஐஸி பாலிசிகள் உள்ளன:

உங்களின் பெருகிவரும் பொறுப்புகளைச் சமாளிக்க இவை உதவும். உயர்ந்துவரும் உங்கள் தரம், வருமானம் ஆகியவற்றுக்கு இணையாகச் செயலாற்றுங்கள். குழந்தைகளின் கல்வி, வாழ்க்கையைத் துவக்குதல், திருமணம், உங்களுடைய தொழில் அல்லது வேலையிலிருந்து மகிழ்வுடன் ஓய்வு பெறுதல் போன்ற குறிப்பிட்ட தேவைகளைப் பூர்த்தி செய்யுங்கள். அத்துடன் எப்போதும் உங்கள் குடும்பத்தை முழுப் பாதுகாப்புடன் வைத்திருங்கள்.

மேலும், நீங்கள் கட்டும் பிரீமியங்கள், வருமான வரி, எஸ்டேட் தீர்வை, சொத்து வரி மற்ற இதர வரிகளின் மேல், உங்களை கணிசமான வரிச்சலுகைகளுக்கு உரிமையுள்ளவராக ஆக்கும். திருமணமான பெண்களின் சொத்துரிமையைச் சட்டத்தின் மூலம் உங்களுடைய மிகக் கூடுதலான மேம்பாட்டைக் கருதி உங்கள் எஸ்டேட்டை உருவாக்க திட்டமிடுவதில் ஆயுள் இன்ஷ்யூரன்ஸும் உதவட்டும்.

இன்றே உங்கள் ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் பாதுகாப்பை மறுபரிசீலனை செய்யுங்கள். உங்கள் எல்ஐஸி முகவரிடமோ அல்லது அருகிலுள்ள எல்ஐஸி அலுவலகத்தின் அதிகாரியிடமோ பேசுங்கள்.

உங்கள் தேவைக்கேற்ப உங்கள் ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் வளரட்டும்.

நாளைய பாதுகாப்பிற்கு இன்றே இன்ஷ்யூர் செய்யுங்கள்.

**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

dacunha LIC 805

# வட்ட மேஜை

அதிசயமான ஒரு கிராமம் பற்றிய செய்திகளைப் படித்து ஆச்சரியமுற்றேன். ஏனெனில் பட்டுக்கோட்டையில் இருக்கும் எங்களுக்கே இந்த விஷயம் இதுவரை தெரியாது. அந்தக் கிராமத்தை அதிசயமான ஒரு கிராமம் என்று சொல்வதைவிட 'சிந்தனைக்குரிய ஒரு கிராமம்' என்றே சொல்லலாம்.
பட்டுக்கோட்டை — வே. ரெத்தினகுமார்

அகஸ்தியனின் 'டயலாக்' வெகு அமர்க்களம் சார்! அவரும் ஓவியர் நடனமும் சேர்ந்துகொண்டு, கிரிக்கெட் மைதானத்தையும், கல்யாண வீட்டையும் ஸ்னாப்ஷாட் பேக் மாதிரி நம் முன்கொண்டு வந்து காட்டுகிறார்கள்!
சங்கரன்கோவில் — டி. மணி

''ஒளி படைத்த கண்ணினாய்'' சிறுகதை அமர்க்களம் போங்கள். தங்களின் பாரதி நூற்றாண்டுப் பணி தொடரட்டும்.
சங்கரனின் ''இரண்டாவது தாலி'' சிறுகதை சிறந்த படைப்பு. காலத்தால் அழிக்க முடியாத காவியத்தைப் படைத்து, பரவசக் கடலில் மூழ்கச் செய்துவிட்டாரே ஆசிரியர்.
பெருங்களத்தூர் — கோமதீஸ்வரன்.

தலையங்கம் கண்டேன். 'குறைந்தபட்ச ஆட்சி, அதிகப்பட்ச சுதந்திரம்' என்றார் ராஜாஜி. இன்று நாடு 'அதிகப்பட்ச ஆட்சி: குறைந்தபட்ச சுதந்திரம்' எனும் கோட்பாட்டை நோக்கிப் போகிறது. அந்நிலைக்கு வக்காலத்து வாங்கிய பிரதமரும், முன்னாள் நிதி மந்திரி வெங்கடராமனும் உடனே ராஜினாமாச் செய்ய வேண்டும். அப்படிச் செய்தால், நாமிருக்கும் நாடு இந்தியா அல்ல என்றாகிவிடுமே?
கெங்கவல்லி — கி. முருகவேள்

பாலசந்தர் தமக்கு எழுதிய இரு கடிதங்களைக் கமலஹாசன் குறிப்பிட்டதால் வாசகர்களாகிய எங்களுக்கு பாலசந்தரின் தமிழ், ஆங்கிலக் கையெழுத்துடன் அவரின் முகவரியும், கமலஹாஸனின் முகவரியும் ஒருங்கே கிடைத்தது உண்மையிலேயே 'பொக்கிஷம்' கிடைத்தது போலத்தான்.
விருத்தாசலம் — எஸ். இம்பி

பக்தி ரசம் ததும்பும் வண்ண அட்டைப் படம், இறையுணர்வு மிக்க இயல்பான பேட்டி, இவ்விரண்டும் மனத்திற்குப் புதுத் தெம்பை ஊட்டின. என்னைப் பொருத்த வரையில் சிருங்கேரி சுவாமிகளின் வண்ண அட்டைப் படம்தான் வாசகர்களுக்குக் கிடைத்த பொக்கிஷம்.
பரசலூர் — ஆர். நாகராஜன்

''மக்கள் நல்வழி செல்ல வழி வகுப்பது தான் எங்கள் முக்கிய குறிக்கோள்'' என்பதை சிருங்கேரி மகா சன்னிதான பீடாதிபதியின் விளக்கத்துடன் தெளிவாக நிரூபித்து விட்டீர்களே!
ஸ்ரீரங்கம் — எம். ஷியாமளா

காதைப் பிடிக்கிறது, கடிக்கிறது, கிள்ளுகிறது போன்ற காதில் பூ வைக்கிற செய்திகள் எல்லாம் பிரசுரம் செய்ய வேறு பத்திரிகைகள் உள்ளன. ''கல்கி''க்கு அது தேவையில்லை!
தக்கலை — உ. சங்கரசுப்பு

'காதலர்கள்' முகம் மறைத்த புகைப்படப் புதிரில் புதுவெள்ளம் படத்தில் சிவகுமார்-புஷ்பலதா இருவரும் காதலர்கள் என்று குறிப்பிட்டுள்ளீர்கள். என்னய்யா அநியாயம் இது? படத்தில் அம்மாவும் மகனுமல்லவா?
சென்னை-24 — கே.எம். பாரூக்

ஒய். ஜி. பி. கட்டுரையைப் படித்தேன். அதில் நாடகத்தில் பெண்கள் அவர் காலத்தில் தான் முதலில் நடித்தார்கள் என்று சொல்லி இருக்கிறார். தவறு, தவறு!
காலம்சென்ற என் தகப்பனார் எம். சுப்ரமணியம் அவர்களால் நடத்தப்பட்ட மாநில அமெச்சூர்கள் நாடகக் குழுவில் பெண்கள் நடித்திருக்கிறார்கள்.
1936லேயே மன்மத விஜயம் நாடகத்தில் என். ஜெயலட்சுமி, அந்தக் கால சினிமா புகழ் கே. என். ராஜம் சகோதரிகள் நடித்தார்கள். நாடக மேதை எஃப். ஜி. நடேசய்யரும் நடித்தார். அடுத்த நாடகத்தில் சினிமா புகழ் கே. அரங்கநாயகி, எஸ். பி. சீதாலட்சுமி முதலியோர் நடித்தனர்.
காலம்சென்ற கல்கி அவர்களும் இதைப் பற்றி ஆனந்தவிகடனில் வெகு அழகாக விமர்சனம் செய்திருந்தார்.
சென்னை-44 — எம்.எஸ். வெங்கடராமன்

## 4

வெளியே பேரரவத்தைச் செவியுற்றுக் குவளை திடுக்குற்று எழுந்தாள். அதற்குள் அக்குடிசை வாசலில் வந்து நின்ற ஓர் உருவம் ''குவளை! குவளை!'' என்று அவசரமாகக் கூப்பிட்டது. வெளியே இருந்து குடிசைக்குள் பாய்ந்த ஒளியை அந்த உருவம் மறைத்த காரணத்தால் நிழல் தோற்றமே அளித்தது. அந்தக் கூச்சலும் கரிய நிழலுருவமும் வேறு ஒருவனுக்குத் திகிலை மூட்டியிருக்கும். ஆனால் விஜயாலயன் அச்சம் என்பதையே அறியாதவனாயிற்றே!

''குவளை! ஒரு மஞ்சள் பூதம் எங்கிருந்தோ வந்திருக்கிறது! அது நம்மவரையெல்லாம் அடித்து நொறுக்குகிறது. குடிசைக் கூரைகளை பிய்த்துப் போடுகிறது. சுவர்களை இடித்துத் தரை மட்டமாக்குகிறது! நமது மருந்து மூலிகைகளை நாலா பக்கமும் வாரி இறைக்கிறது, சட்டிப்பானைகளை உடைத்தெறிகிறது! அதை யாராலும் அடக்க முடியவில்லை. குவளை! நீ உடனே தப்பித்துப் போய்விடு! பின்னால் உன்னை வழுக்குப் பாறை அருகே சந்திக்கிறேன்'' என்றான் வாசலில் நின்ற அந்த மனிதன் பரபரப்புடன். அவனுக்கு மூச்சு வாங்கியது.

''பூதமாவது பிசாசாவது! என்ன அப்பா உளறுகிறீர்கள்?'' என்று குவளை கேட்ட போது உறவு முறை புரிய வந்ததால் அந்த உருவத்தைச் சற்று உன்னிப்பாய்க் கவனித்தான் விஜயாலயன். அச்சமயம் அம்மனிதன் வாசல் நிலையருகே இருந்து சற்று உள்ளே தள்ளி வந்திருந்ததால் அவன் மேல் வெளிச்சம் பட்டு அவன் கோலத்தை நன்கு எடுத்துக் காட்டியது.

மார்பை ஒரு மான் தோல் மறைக்க, இடையில் முரட்டுப் பருத்தி ஆடை அணிந்திருந்தான் குவளையின் தகப்பன். அவன் தலைப் பாகை பலவிதப் பறவைகளின் வண்ண வண்ண இறகுகளைச் சேகரித்துத் தயாரித்த ஒன்றாகக் காணப்பட்டது. காதளவு நீண்ட வளைந்த பெரிய மீசை ஒரு பயங்கரத்தைக் கொடுத்தது. அவன் கண்கள் சிவந்திருந்ததானது மது அருந்தியிருப்பானோ என்று எண்ண வைத்தது. கையில் ஒரு சிறிய சூலாயுதம் தாங்கியிருந்தான். அதில் கட்டப்பட்டிருந்த சின்னச் சின்ன மணிகள் அவன் கையை அசைத்தபோதெல்லாம் ஒலித்துக் கொண்டிருந்தன. சங்குகளும் சோழிகளும் கோக்கப் பட்டிருந்த மாலைகளை அணிந்திருந்தான். நெற்றியில் திருநீறு பூசி மையத்தில் பெரிதாகச் சந்தன குங்குமப் பொட்டு இட்டிருந்தான். காதுகளில் பெரிது பெரிதாக இரு முத்துக்கள் குண்டலங்களாகத் தொங்கின.

பார்ப்பவர் மிரளும்படியான தோற்றமுடைய அவன் இப்போது எதையோ பார்த்து மிரண்டு போயிருப்பதானது விஜயாலயனுக்கு அடக்க மாட்டாத சிரிப்பை உண்டாக்கியது. ''குவளை! ஏதோ மந்திரம் மாயம் என்றெல்லாம் பீற்றிக் கொண்டாயே! இந்த மஞ்சள் பூதத்தின் முன் அதெல்லாம் ஒன்றும் பலிக்கவில்லையா?'' என்று கேட்டுவிட்டு மறுபடி பெரிதாக நகைத்தான்.

குவளை அவனைச் சுட்டெரித்து விடுபவளைப் போலப் பார்த்தாள். ''பரிகாசமா செய்கிறீர்கள்!'' என்று கேட்ட அவள், ''இதோ! என் சக்தியைக் காட்டுகிறேன் பாருங்கள்'' என்று கூறாமல் கூறி உணர்த்துகிறவள் போல வாசலை நோக்கி நடந்தாள்.

விஜயாலயன் சட்டென்று அவள் கரத்தைப் பற்றப் போக, அவளும் அதே சமயத்தில் நகர, அந்த வேகத்தில் அவள் முந்தானையின் முனையும் அவன் கையில் சிக்குண்டது. ''அசடே! என்மீது ஆத்திரப்பட்டு ஆபத்தில் மாட்டிக் கொள்ளாதே; இதோ நானே வருகிறேன். அந்த மஞ்சள் பூதம் எனக்கு மட்டும்தான் அடங்கும்'' என்றான்.

அவள் கோபம் அடங்காதவளாய்த் தன் கையை விடுவித்துக் கொள்ள உதறினாள். அப்போது விஜயாலயனின் தோளில் பட்டிருந்த காயத்தில் சுரீரென்று வேல் பாய்வது போல் வேதனை தெறித்தது. விஜயாலயனின் பிடி அக்கணத்தில் சற்றுத் தளர அவள் சுயேச்சை பெற்றவளாய் விரைந்தாள். அந்த வேகத்திலும் தன் முந்தானையின் முனை இன்னும் விஜயாலயன் கரத்தில் சிக்கியபடிதான் இருக்கிறது என்பதையும் தான் விடுதலை பெற்று விரைந்தபோது அதுவும்

# ரவிகுல திலகன்

விடுவிக்கப்பெற்று விட்டதென்பதையும் அவள் உணர்ந்தாலும் அதற்காகத் தயங்கவோ தாமதிக்கவோ செய்யாமல் வாசலை நோக்கி நடந்தாள். மான் தோலினாலான கச்சணிந்த எடுப்பான தோற்றத்தையும் இடையை இறுகச் சுற்றியிருந்த சிற்றாடை உணர்த்திய வளங்களையும் கண்டும் அவற்றை ரசிக்கிற நேரமல்ல அது என்று கருதியவனாக விஜயாலயன் தன் கையில் உருவினாற்போல் வந்துவிட்ட தடிமனான துகிலையே தலைப்பாகையாகச் சுற்றித் தன் தழும்புகளை மறைத்தான். பட்டுப் பீதாம்பரங்களை அணிந்து பழக்கப்பட்ட அந்த உடல் இப்போது தன்மீது போர்த்தப்பட்டிருந்த முரட்டு விரிப்பையே இடையைச் சுற்றி இறுக்கமாக அணிந்தது.

குவளையைத் தொடர்ந்து அவள் தகப்பன் செல்ல, அவனை விஜயாலயன் பின்பற்றினான். கானகத்தின் மையத்தில் அவர்கள் சில மரங்களை வெட்டிச் சாய்த்து வெட்ட வெளி



# செம்பியன்

உண்டாக்கி அதில் இங்குமங்குமாய்ச் சில குடிசைகளை நிறைய இடைவெளி விட்டுக் கட்டிக் கொண்டிருந்தார்கள். விஜயாலயன் எதிர்பார்த்தபடியே அங்கே அவனுடைய மெய்க் காவலனை சீனன்தான் அட்டூழியம் பண்ணிக் கொண்டிருந்தான். நடந்ததை ஊகிப்பது இளவரசனுக்கு எளிதாகவே இருந்தது. அவனுடைய பரிவாரங்கள் இளவலைத் தேடிச் சோர்ந்து தலைநகர் பழையாறைக்கே திரும்பிவிட்டன அல்லது கானக விளிம்பில் கோமகன் எப்படியும் திரும்பி வருவான் என்று எதிர்பார்த்துக் காத்திருக்கின்றன. ஆனால் சீனன் தோல்வியை ஒப்புக்கொள்ளவில்லை. பரணியின் பாதத் தடங்கள் பதிந்த பூமியைக் கூர்ந்த பார்வையுடன் பின்பற்றி வந்திருக்கிறான். முறிந்த சில பல கிளைகள்; தரையில் படிமானமாயிராமல் அலைப்புண்ட இலைச் சருகுகள் முதலியவற்றை நுணுகி ஆராய்ந்து ஆண்டை சென்ற வழியை அடிமை உணர்ந்து பின்பற்றியிருக்கிறான். வழுக்குப் பாறையருகே ஒரு போராட்டம் நடந்ததற்கான அறிகுறிகள்: ரத்தச் சிதறல்கள், இறந்த மிருகங்கள், ஓநாய்கள் தின்றது போக மிச்சமிருந்த பிணத்தின் நாற்றம். ஒரு மனிதனை யாரோ தரையோடு தரையாக இழுத்துச் சென்றிருப்பதற்கான தடையங்கள். ஒன்றிலிருந்து ஒன்றைப் பற்றிக்கொண்டு மெல்ல மெல்ல முன்னேறிக் கடைசியில் பரணி இங்கே மேய்வதைப் பார்த்து, சுற்றிலும் குடில்களைக் கண்டு, 'சரி, இங்குள்ளவர்கள் இளவலை ஏதோ துர் எண்ணத்தில்தான் கைப்பற்றிச் சிறை வைத்திருக்கிறார்கள்' என்று தீர்மானித்துத் தன் கைவரிசையைக் காட்ட ஆரம்பித்திருக்கிறான். இவர்கள் ஒரு சீனனை இதுவரை பார்த்திராததால் அந்த வெளிர் மஞ்சள் நிறத்தானைப் பூதம் என்றே கருதிப் பயந்துவிட்டிருக்கிறார்கள்!

இதையெல்லாம் மஞ்சள் பூதம் என்று பயத்துடன் குவளையின் தந்தை கூறக் கேட்ட கணத்திலேயே விஜயாலயன் புரிந்து கொண்டிருந்தாலும் மேலே என்ன செய்வதென அவன் தீர்மானிப்பதற்குள் குவளை தன் வாயில் உள்ளங் கையைப் பதித்து முன்போலவே விநோதமான ஒலிக் குறி எழுப்பினாள். ஒலி ஒரேபோலிருந்ததே தவிர, அதன் இசை வடிவமும் தான கதியும் வேறுபட்டிருந்தன. தன் வசமிருந்த ஓநாய்களுக்குத்தான் அவள் ஏதோ கட்டளை பிறப்பிக்கிறாள் என்பது புரிந்தாலும் அடுத்து நடந்ததை இளவல் சற்றும் எதிர்பார்க்கவில்லை.

எங்கிருந்துதான் வந்தனவோ என்று வியந்து பிரமிக்கும் வண்ணம் அந்தக் குடியிருப்புப் பகுதியைச் சுற்றிச் சூழ்ந்திருந்த கானகத்திலிருந்து ஒரே சமயத்தில் ஏராள

மான ஓநாய்கள் ஓடிவந்தன. ஒன்று, பத்து, இருபது, ஐம்பது என்று அவற்றின் எண்ணிக்கை துரிதமாகப் பெருகியது. சீனனை அந்நியன் என்று இமைக்கும் நேரத்தில் எப்படியோ உணர்ந்து கொண்டு அவனை நாலா புறமும் சுற்றிச் சூழ்ந்தன. படிப்படியாக நெருங்கி வரவும் செய்தன. சீனன் இந்த ஆபத்தைக் கண்டு பயத்தை விட ஆச்சரியமே மேலோங்க ஒருசில கணங்கள் சிலையாகித் தாமதித்தான். அடுத்து அவன் கைக்கெட்டும் தொலைவில் இருந்த ஒரு மூங்கில் புதரிலிருந்து செழித்து வளர்ந்த ஒரு கழியை முறித்து எடுத்துக் கொண்டான். அதைக் கையிலேந்திச் சுழற்றியவாறே நாலா திசைகளிலும் திரும்பித் தன்னைத் தானே வலம் வந்தான். ஓநாய்கள் சற்றே தயங்கினாலும் பயந்து ஓடிவிடவில்லை. அவற்றிடமிருந்து சீனன் அதிக நேரம் தன்னைக் காத்துக் கொள்ள முடியாது என்பது விஜயாலயனுக்குப் புரிந்தது. குவளையிடமிருந்து சங்கேத ஒலி பெற்று சீனன் முதுகைப் பார்க்க ஒரு ஓநாய் பாய்வதில் வெற்றி கண்டு விட்டால் போதும், பிறகு எல்லாமாக ஒருசேர நாற்றிசைகளிலிருந்தும் தாக்கி அவனைக் கடித்துக் குதறிவிடும்! எவ்வளவுதான் வேகமாய் அவன் தட்டாமாலை சுற்றினாலும் சக்ராயுதமாகத் தன் கரத்திலிருந்த மூங்கிலைச் சுழற்றினாலும் பயனிராது.

''குவளை! நிறுத்து! அவனுக்கு ஒன்றும் நேரக் கூடாது! அவன் பூதமுமில்லை பிசாசுமில்லை. சீன தேசத்தைச் சேர்ந்தவன். என் மெய்க்காவலன். என் கட்டளைக்குக் கீழ்ப் படிவான். இனி உங்களுக்கு ஒரு தீங்கும் இழைக்க மாட்டான். உன் ஓநாய்களைப் பின்வாங்கச் செய்!'' என்றான் விஜயாலயன்.

''இளவரசே! இந்த ஏழையைப் பார்த்து ஏளனம் செய்தீர்கள் அல்லவா? இப்போது என்ன சொல்கிறீர்கள்?'' என்று கேட்டான் குவளை. ''உங்கள் மெய்க் காவலனால் தனது மெய்யையே பாதுகாத்துக் கொள்ள முடியவில்லையே!''

''குவளை! விளையாடுவதற்கு இது தருணமல்ல!'' என்றான் விஜயாலயன். ''உன் மாய மந்திரம் எப்பேர்ப்பட்ட பூதத்தையும் வென்றுவிட முடியும் என்று ஒப்புக்கொள்கிறேன். சரிதானா?''

குவளை இளவலைக் கோபத்தோடு திரும்பிப் பார்த்தவன் குபுக்கென்று சிரித்தான். அவனது முந்தானையைத் தலையைச் சுற்றிக் கட்டியிருந்ததைப் பார்த்துச் சிரித்தானா அல்லது ஒரு குறமகளிடம் சோழ தேசத்தின் எதிர்கால மன்னர் தோல்வியை ஒப்புக்கொண்டதைக் கருதிச் சிரித்தானா என்பது தெரியவில்லை. சமாதானமடைந்தவனாக உள்ளங்கையை வாயில் வைத்து ஒலிக் குறி எழுப்பினான். வேறு ஒரு வித்தியாசமான இசை வடிவமைப்புக் கொண்டதாய் விளங்கிய அதைக் கேட்டு அந்த ஓநாய்கள் அனைத்தும் சீனனை உன்னி நோக்கியவாறே பதுங்கிப் பின்வாங்கின. மின்னலெனத் திரும்பி ஓட்டம் பிடித்து அடர்ந்த கானகத்தில் மாயமாய் மறைந்தன.

சீனன் விஜயாலயனைக் கண்டு பேருவகை எய்தியவனாக மூங்கிலை விட்டெறிந்துவிட்டு கம்பீரமாக அவனை நெருங்கி அவன் காலடியில் பணிவுடன் மண்டியிட்டான். விஜயாலயனின் கரத்தைப் பய பக்தியுடன் ஏந்தி, விரல்களை அவற்றின் புறப் பகுதியில் முத்தமிட்டான்.

விஜயாலயன் குவளைக்குச் சுருக்கமாக சீனனைப் பற்றிய விவரங்களை எடுத்துரைக்க, அவன், ''அழகான மெய்க் காவலனைப் பிடித்தீர்கள் போங்கள்! அனுமன் அழித்த அசோக வனமாகி விட்டதே எங்கள் குடியிருப்பு!'' என்று அலுத்துக் கொண்டான்.

''கவலைப்படாதே குவளை! அழித்த வேகத்தில் ஆக்கவும் அவன் உதவுவான்'' என்றான் விஜயாலயன்.

• • •

அன்று மாலை நிழல்கள் நீளவும் உடுக்கை ஒலி கேட்டது. விஜயாலயன் குடிலை விட்டு வெளியேறிச் சத்தம் வந்த திசை நோக்கி நடந்தான். அந்நாடோடி மக்களின் குக்கிராமத்துக்கு மத்தியில் திறந்த வெளியில் திடல் ஒன்றிருந்தது. அதன் ஒரு பக்கம் மிகப் பெரியதொரு காளி சிலை நிகும்ப சூதனி வடிவில் காட்சியளித்தது. அதை யொட்டிய ஓர் அரங்கம். அங்கே ஆடல் பாடல்களுக்கான ஆயத்தங்கள் நடந்து கொண்டிருந்தன.

விஜயாலயனைப் போலவே வேறு பலரும் உடுக்கை ஒலி கேட்டுத் தத்தம் குடிசைகளிலிருந்து வெளிப்பட்டு வந்து திரண்டனர். மூங்கில் கழிகளையும் பிளாச்சுகளையும் சீவின பிரம்பையும் பயன்படுத்தித் தயாரித்த ஓர் ஆசனத்தைக் குவளை இலேசாகத் தூக்கிக் கொண்டு வந்து வைத்தான். ''இளவரசே! இதோ உங்கள் அரியாசனம்! இராஜ நர்த்தகிகளின் நடனம் சற்று நேரத்தில் தொடங்கும்.'' என்றான். அவனுடைய அச்சமற்ற தன்மையும் விளையாட்டுப் போக்கும் இவனுக்குப் பிடித்திருந்தது மட்டுமல்ல, தேவையாகக்கூட இருந்தது! ''நீயும் ஆடப் போகிறாயா?'' என்றான்.

ரசிகமணி டி. கே. சி. இந்தக்காலக் கல்வி முறையின் எதிரி 'நம்பர் ஒன்'. ஒரு பையன் எஸ். எஸ். எல். சி. யில் தோற்று விட்டதால் அழுது கொண்டிருந்தான். அவர் அவனைக் கூப்பிட்டுத் தேறுதல் சொன்ன 'விதம் இது:

''அசடு! இதற்குப் போய் யாராவது அழுவார்களா? துரதிஷ்டவசமாக நீ பாஸ்பண்ணி யிருந்தாத்தான் அழணும்!''

- சிவசக்தி



''ஆடலாம்! ஆனால் அந்த அதிர்ச்சியை உங்களால் தாங்கிக் கொள்ள முடியுமா என்பதுதான் சந்தேகம்! ஏற்கனவே ரொம்ப நலிந்து போயிருக்கும் உடம்பாயிற்றே. அதனால் உங்கள் பக்கத்தில் அமர்ந்து. இங்கே சக்தி தாண்டவம் நடக்கும்போது உங்களுக்குத் தைரியம் சொல்லிக் கொண்டிருக்கலாம் என்று பார்க்கிறேன்!'' விஜயாலயனும் அதையே விரும்பியவனாக மகிழ்ச்சியுடன் சிரித்து அவள் கரத்தைப் பற்றித் தனக்குப் பக்கத்தில் புல் தரையில் அவளை அமர்த்தினான்.

உடுக்கை ஒலி வேகம் பெற்றது. சக்தி தாண்டவம் ஆடினாள் ஒருத்தி. அதன் பின்னர் சும்பன் நிசும்பன் என்ற அசுரர்களின் கதையை குழலும் யாழும் உடனிசையச் சிலர் பாடினார்கள். பாட்டு முடிந்ததும் ஆட வல்லார்கள் அரங்குக்கு வந்தார்கள். மறுபடி அதே பாட்டு ஒலிக்க, மரத்தாலான மகிஷம் போன்ற வடிவங்களைத் தலையில் கவிழ்த்துக் கொண்டு அவர்கள் உடுக்கைத் தாளத்துக்கு ஏற்ப ஆர்ப்பாட்டம் செய்து ஆடினார்கள். இதன் பின்னர் அன்னை பராசக்தி அவர்களை வதம் செய்த பாடல் ஒலித்தது. அதைத் தொடர்ந்து மறுபடி அதே பாடலுக்கு ஏற்பக் கூத்து நடந்தது.

உணர்ச்சி வசப்பட்டு அவர்கள் ஆடிய போது குவளையின் கண்கள் அவற்றின் தன்மையை இழந்து சிவந்து நீப்பிழம்பாக ஜொலிப்பதைக் கண்டான் விஜயாலயன். அது ஒருவேளை மாலைச் சூரியனின் கிரணங்களைப் பிரதிபலித்ததாலும் இருக்கலாம். ஆனால் மகிஷாசுர மர்த்தனியின் ஆவேசம் அவளுக்குள்ளும் புகுந்து கொண்டு அவளை ஆட்டுவிப்பதை அவன் கரத்தில் சிறைப் பட்டிருந்த அவளுடைய விரல்கள் அவனுக்கு உணர்த்தின. அந்த விரல்களின் நகங்கள் அவன் உள்ளங்கையில் ஆழப் பதிந்து வேதனை தந்தன!

கூத்து முடிந்ததும் அவன் எழுந்து காலாற நடந்தான். தான் பற்றியிருந்த கரத்தை அவன் விடவில்லை. அவளும் காயமுற்று, சற்றுப் பலவீனப்பட்டிருந்த இளவலுக்குக் கைலாகு கொடுத்து உதவுவது போலவே உடன் வந்தாள்.

''அடேயப்பா! இந்த நடனம் இவ்வளவு ஆவேசத்தை உன்னிடம் எழுப்பமுடிகிறதே!'' என்று வியந்து வினவின விஜயாலயன், தன் உள்ளங்கையில் அவள் நகங்கள் பதிந்திருந்த வடுக்களைக் காண்பித்தான். அப்போது அவர்கள் கிராம எல்லையைத் தாண்டி வனத்தின் விளிம்பை அடைந்து எல்லையோரமாகவே நடந்து கொண்டிருந்தார்கள். ''இதைக் காணும்போது எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது'' என்று தொடர்ந்து பேசினான் விஜயாலயன். ''இவர்கள் ஏன் இந்தக் கானகத்துக்குள் ஆடிக் கொண்டிருக்க வேண்டும்? சோழவள நாட்டின் மூலை முடுக்குகளிலெல்லாம் கூட இவர்களுடைய கூத்து நடக்க நான் ஆவன செய்கிறேன். கிராமங்களில் மட்டுமின்றி நகரங்களிலும் பெரிய அரங்குகள் அமைத்துஆடல் பாடல்கள்நடை பெறட்டும்.



தேங்காயிலும் சில சமயங்களில் முத்து விளைவது உண்டு. ஆனால் அது அவ்வளவு அழகாக இருக்காதாம்.
தகவல்: கௌரி தியாகராஜன்

மக்களிடையே ஒரு ஆவேசத்தை உருவாக்குவோம்... அவர்களை எழுச்சி பெறச் செய்வோம்.''

''எதற்காக இளவரசே?''

''இதுகூடத் தெரியவில்லையா குவளை? அடிமை வாழ்வைத் தகர்த்தெறிந்து சுதந்திரம் பெற அவர்கள் வீரமுடன் முன்வர வேண்டும் என்பதற்காகத்தான்!''

''அருமையான திட்டம்'' என்றாள் குவளை. ''வெளிப் பார்வைக்கு இது இறையுணர்வை வளர்ப்பதாகத் தோன்றுமே யன்றி பல்லவ சக்கரவர்த்திக்கு எதிரான சூழ்ச்சியாகத் தென்படாது!''

''புத்திசாலிதான் நீ! என் உள் நோக்கைப் புரிந்து கொண்டு விட்டாயே!''

''இதைவிடவும் புரிந்து கொண்டிருக்கிறேன் இளவரசே! எங்களைப் பயன்படுத்தி மக்களுக்கு வீர உணர்ச்சி ஊட்டுவீர்கள். ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் சோழ சாம்ராஜ்யத்தையும் நிறுவி மாமன்னனென்று முடிசூடிக் கொள்ளவும் செய்வீர்கள். அப்போது என்போன்ற ஏழைகளை மறந்தும் விடுவீர்கள்!''

உணர்ச்சி வசப்பட்டவளாய்ச் சரேலென அவளை இழுத்து அணைத்துக் கொண்டான் விஜயாலயன். ''குவளை! என் உயிர் காத்த உன்னையும், உன் உற்றாரையுமா நான் மறப்பேன்?'' என்று கேட்டவாறு, இடக் கரம் அவள் முதுகில் பதிந்து தன்னுடன் சேர்த்து அழுத்த, வலக்கரத்தால் அவளுடைய ஒரு கன்னத்தையும் முகவாயையும் ஒருசேர ஏந்தித் தன்னைப் பார்க்க உயர்த்தினான்.

'குவளை நாணத்துடன் அவன் கரத்தை அகற்றவும், தன்னை விடுவித்துக்கொள்ளவும் முயன்றாள். முடியாது போகச் செயலிழந்தாள்.

(தொடரும்)

# நம்பக்கூடாது இந்த வேலைக்காரியை

— விஜயபாலயன்

சரசு மெச்சர்காலையில்கண் விழித்தபோது சூரியன் ஜன்னலுக்குள் புக முயன்று கொண்டிருந்தான். எழுந்து போய் ஜன்னலைத் திறந்து விட்டாள்.

இரு கைகளையும் மேலே தூக்கிச் சோம்பல் முறித்தபோது ஜன்னலுக்கு வெளியே பார்த்தாள்.

ஓர் இளம் பெண் தெரிந்தாள்.

செக்கச் சிவந்த நிறத்தில் இருந்தாள். உடம்பு செழுமையாக இருந்தது.

குவிந்த கன்னம், கூரான மூக்கு, பளபளக்கும் விழிகள், அழகான சின்ன உதடுகள்.

அவளுக்குக் குறைந்தது பதினைந்து பதினாறுதான் இருக்கும்.

பாவாடை தாவணியில் இருந்தாள்.

பாவாடை முழங்காலுக்கு மேல் தூக்கி வைத்துக் கொண்டு பாத்திரங்களைத் தேய்த்துக் கொண்டிருந்தாள்.

அக்கா மரகதம் காப்பி தம்ளருடன் அறைக்குள் வந்தாள்.

சரசு தம்ளரை வாங்கிக் கொண்டு ஜன்னலுக்கு வெளியே பாத்திரம் தேய்த்துக் கொண்டிருக்கும் அந்தப் பெண்ணைப் பார்த்தாள். அக்காவிடம் கேட்டாள்.

''யாரக்கா அந்தப் பொண்ணு?''

''அதுவா? வேலைக்காரப் பொண்ணு. பேர் ருக்குமிணி. நான் ருக்குன்னு கூப்பிடுவேன். அவங்கம்மா வேலை செய்துகிட்டு இருந்தா. அவளுக்கு அடிக்கடி நெஞ்சு வலி வரும். அதனாலேயே அவளுக்குப் பதிலா இந்த பொண்ணு வந்து செய்யறா. ஏழைப் பொண்ணு.... ரொம்ப மரியாதையான பொண்ணு.''

சரசு கோட்டூரில் ஆசிரியையாகப் பணியாற்றுகிறவள். விடுமுறைகளில் கோவையில் உள்ள அக்கா வீட்டுக்கு வந்து சில நாட்கள் தங்குவாள்.

''அக்கா... அக்கா... குளிக்கறப்போ பாத்ரூம் ஜன்னல் மேலே கழற்றி வெச்சிருந்த கம்மலையும் மூக்குத்தியையும் காணலேக்கா..''

''நல்லாத் தேடிப்பாரு சரசு.''

சரசு பதறினாள்.

''நல்லாத் தேடிப் பார்த்துட்டேன்க்கா. அதைக் காணோம். எதுக்கும் அந்த ருக்குவைக் கூப்பிடு....''

''எதற்கு சரசு?''

''ஒருவேளை அவ எடுத்திருந்தா?''

அக்கா மரகதம் வெளியே தலையை நீட்டி, ''ருக்கு, ருக்கு!'' என்று கத்தினாள்.

வீட்டுக்குக் கிளம்பிக் கொண்டிருந்த ருக்கு வந்தாள்.

''என்னம்மா?''

''பாத்ரூம் ஜன்னல் மேலே வெச்சிருந்த மூக்குத்தியையும் கம்மலையும் பாத்தியா?''

''இல்லையேம்மா....''



சரசு குறுக்கிட்டாள்.

''எங்கே தாவணியை உதறிக் காட்டு?''

ருக்கு தாவணியை உதறினாள்.

''எங்கே...அந்தப் பாத்திரத்தைக் குடு.''

''அம்மா... என் மேலே சந்தேகப்படறீங்களா?... இந்தாங்க பார்த்துக்குங்க.''

பாத்திரத்தை நீட்டினாள்.

அக்கா மரகதம் பாத்திரத்தைவாங்கினாள்.

மூடியைத் திறந்து சோற்றுக்குள் கையை விட்டபோது கம்மலும் மூக்குத்தியும் வெளியில் வந்தது.

அக்கா கோபத்தோடு கத்தினாள்.

''அடிப் பாவி! உன்னை நல்ல பொண்ணுன்னு நினைச்சிருந்தேனே? நீயா இப்படி? திருட்டுக் கழுதை! இனிமே நீ இங்கே வேலைக்கு வரவேண்டாம். நாளைக்கு வந்து உன்னோட கணக்கைத் தீர்த்துட்டுப் போ.''

ருக்கு பதறினாள்.

''அம்மா... சத்தியமா இதை நான் திருடலேம்மா... என்னை நம்புங்கம்மா. இது எப்படி இதுலே வந்ததுன்னே எனக்குத் தெரியாது.''

சரசு அவளை முறைத்தாள்.

''திருடி மாட்டிக்கிட்ட எல்லோரும் சொல்லும் வார்த்தைதாண்டி இது. மரியாதையா வெளியே போறியா இல்லே போலீசுக்குப் போன் பண்ணட்டுமா?''

ருக்கு திரும்பி நடந்தாள்.

சரசு டீச்சர் ஊருக்குக்கிளம்பினாள்.

வாசலில் ஆட்டோ வந்து நின்றது.

சூட் கேஸைக் கையில் எடுத்தபடி, ''சரிக்கா... வர்றேன்'' என்றாள் சரசு.

ஆட்டோ புறப்பட்டது.

ஆட்டோ தெருவைக் கடந்தது.

சரசு திரும்பிப் பார்த்தாள்.

ருக்கு ஆட்டோவின் பின்னால் ஓடிவந்தாள்.

''டிரைவர் கொஞ்சம் நிறுத்து.''

ஆட்டோ நின்றது.

ருக்கு மூச்சிரைக்க ஆட்டோ அருகே வந்து நின்றாள்.

''எதுக்காகப் பின்னாலே ஓடி வர்றே?''

''அம்மா... நீங்க படிச்சவங்க. எத்தனையோ புள்ளைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கறவங்க. நாங்க ஏழைகள்தாம்மா. வயித்துக்குச் சோறு இல்லாட்டிப் பட்டினியாக் கிடந்து சாவோமே தவிர திருட மாட்டோம். சத்தியமாச் சொல்றேன். அந்த நகை எப்படி அந்தப் பாத்திரத்தில வந்ததுன்னு எனக்குத் தெரியாதுங்க.'' ருக்குவின் குரல் தளர்ந்து அழுகை தென்பட்டது.

சரசுவுக்கு அவளைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது.

சொன்னாள். ''அந்த நகைகளை நான்தான் அதுல போட்டேன்.''

ருக்கு அதிர்ந்தாள்.

''ஏம்மா! நான் உங்களுக்கு என்னம்மா துரோகம் செஞ்சேன்? எம் மேலே திருட்டுப்பட்டம் கட்டி... என்னை வேலையை விட்டு நிறுத்துறதுல உங்களுக்கு என்ன லாபம்?''

சரசு அமைதியாகச் சொன்னாள்.





''உன்னோட லாபத்துக்காகத்தான் ருக்கு அப்படிச் செய்தேன். உன்னோட வாழ்க்கை நல்லா இருக்க வேணுங்கறதுக்காகத்தாம்மா நான் அப்படி நடந்துக்கிட்டேன். எங்க அக்கா புருஷன் பெண்கள் விஷயத்துல ரொம்ப மோசமானவர். எத்தனையோ வேலைக்காரிகள் அவர்கிட்ட ஏமாந்துபோயிருக்காங்க. பணத்தைக் கொடுத்து அவங்களைச்சரிக்கட்டுவார். என் அக்கா கையைப் பிசைஞ்சுகிட்டு என்கிட்ட சொல்லி அழுதிருக்கா. நீ பார்த்தா நல்ல பொண்ணா இருக்கே. ரொம்ப சின்ன வயசா இருக்கே. உன்னோட வாழ்க்கை நல்லா இருக்க வேணும்னுதான் அப்படிச் செய்தேன்....''

சரசு சூட்கேஸிலிருந்து முப்பது ரூபாயும் இரண்டு சேலைகளையும் எடுத்து ருக்குவின் கையில் கொடுத்தாள்.

''இந்தா ருக்கு... இந்தப் பணத்தை வெச்சுக்க. இந்தச் சேலைகளைக் கட்டிக்க... வேறு ஒரு நல்ல வீடாப் பார்த்து வேலையைத் தேடிக்க... நான் வர்றேன்....''

ருக்கு பேச வார்த்தைகள் வராமல் கையிலிருந்த முப்பது ரூபாயையும் சேலைகளையும் பார்த்தாள். விழிகளில் நீர் உதிர நிமிர்ந்த போது.. சரசு டீச்சர் ஆட்டோவில் ஏறி உட்கார்ந்தாள்.

ஆட்டோ புறப்பட்டது.

வண்ணங்கள், வண்ணங்கள் அனைத்தும் கண்கவர் வண்ணங்கள்! உங்கள் சமையலறைக்கு உகந்த ஒன்றைத் தேர்ந்தெடுங்கள்.



# JOHNSON®

# மிக்ஸர் கிரைண்டர்

**இப்பொழுது நான்கு மகிழ்வூட்டும் நிறங்களில் கிடைக்கின்றன.**

- பேபி ப்ளூ
- அல்ட்ரா ஒயிட்
- ஐஸ் கிரீம்
- ஜெர்மன் ரெட்

அதிக அமைதியாக இயங்கவும். வெகு விரைவிலேயே குளிர்ச்சி பெறவும் தகுந்த வகையில், பிரத்யோகமான அம்சங்களுடன் இப்பொழுது முற்றிலும் மாற்றியமைக்கப்பட்டிருக்கிறது ஜான்ஸன் மிக்சர் கிரைண்டர்.

- முழுமையாகச் செயலாற்றும் தன்மையுடைய அபூர்வமான பிளேடுகள்
- மிகச் சிறப்பாக குளிர்ச்சி அடைவதற்காக மேற்பகுதியில் சிறு துவாரம்
- அதிகச் சுழற்சிக்கு ஏற்ற வகையில் அமைக்கப்பட்ட கலவை ஜாடி
- உலோக ஜாடி மீது. சிறப்பாக டிசைன் செய்து பொருத்தப்பட்ட கைபிடி
- அதிக சுகாதாரத்திற்காக இரண்டு ஜாடிகள், அதிகப் பாதுகாப்பிற்காக இரண்டு பிளேடுகள்
- துப்புரவாகச் சுத்தம் செய்ய சுலபமாகக் கழற்றக் கூடிய பாகங்கள்
- வேகத்தைச் சிரமமில்லாமல் கூட்டக் குறைக்க ஸ்பெஷல் இன்ச்சர்—ஸ்விட்ச்
- ஒரு வருட உத்திரவாதம், விற்பனைக்குப் பிறகு குறித்த கால சேவை

Parade/BE/6153

**JOHNSON®** சக்தி, சிறப்புத்தன்மை, செயல்திறன் ஆகியவற்றில் அதி உன்னதமானது



# தில்லையுடன் என்ன தகராறு?

பி.எஸ். ராமமூர்த்தி

சென்ற மாதம் 21ம் தேதியன்று சென்னை உயர்நீதி மன்றத்தில் நீதிபதி மோகன் தமிழக அரசுக்கு எதிராக ஒரு தீர்ப்பு வழங்கினார். அத்துடன் அரசுக்கும், சிதம்பரம் தீட்சிதர்களுக்கும் 1951ம் ஆண்டு ஆரம்பமான தகராறு ஒரு முக்கிய கட்டத்தை அடைந்திருக்கிறது. மழை நின்றுவிட்டது. ஆனாலும் தூவானம் நீடிக்கிறது. நீதி மன்றத் தீர்ப்பை எதிர்த்து அரசு அப்பீல் செய்யும் என்று தெரிகிறது.

இந்த வழக்கை புராண, சரித்திர ரீதியாகவும், விருப்பு வெறுப்பின்றியும், பிடிவாதம் இல்லாமலும் அணுக வேண்டும் என்கிறார்கள் சிதம்பரம் தீட்சிதர்களும் அவர்களது சட்ட ஆலோசகர் என். வேங்கடராமனும். வேங்கடராமன் சென்னை சிவில் கோர்ட் நீதிபதியாகவும், ஹிந்து அறநிலைய டெபுடி கமிஷனராகவும் பணியாற்றியவர். தற்போது பெரும்பாலும் கோவில் நிர்வாகம் சம்பந்தப்பட்ட கேஸ்களில் ஆஜராகிறார்.

சிதம்பரம் கோவில் சுவையான வரலாறு படைத்தது. ஆதி காலத்தில் காடாக இருந்த தில்லை எனப்படும் சிதம்பரத்தில், பதஞ்சலி, வியாக்ரபாதர் என்ற இரு பக்தர்களுக்கு முன்னால் சிவபெருமான் நடனமாடினார். பிறகு உலகத்தை உய்விக்க அவர் அங்கு நிரந்தரமாக நடராஜராகவே காட்சியளிக்கிறார். இது புராணம்.

தில்லை தீட்சிதர்கள் வெறும் அர்ச்சகர்கள் அல்ல. இவர்கள் சிவனுக்குத் தொண்டாற்றவே படைக்கப்பட்டார்கள் என்று ஐதிகம். ஆதியில் நடராஜரையும் சேர்த்து இவர்கள் 3000 பேர்களாக இருந்தார்கள். நடராஜப் பெருமானும், சிதம்பரம் கோவிலும் இவர்களது பரம்பரைச் சொத்துக்கள்.

ஹிந்து மத அறநிலையச் சட்டத்தின் கீழ் சிதம்பரம் கோவிலைப் பராமரிக்கும் முறையில் 1932ம் ஆண்டு ஓர் உடன்பாடு ஏற்பட்டது. நான்கு வருடங்களுக்குப் பிறகு இதில் சிலமாற்றங்கள் செய்யப்பட்டன. இத்திட்டத்தின்படி தீட்சிதர்கள் சம்மதத்துடன் கோவில் நிர்வாகத்தைப் பார்வையிட கௌரவப் பார்வையாளர் குழு ஒன்றை நியமிக்கவும், அர்ச்சனைச் சீட்டு, மற்றும் உண்டியல் முறையைப் புகுத்தவும் அரசுக்கு அதிகாரம் ஏற்பட்டது. ஆனால் என்ன காரணத்தாலோ, சுமார் 15 ஆண்டுகள் இத்திட்டத்தைஇரு தரப்பாரும் மறந்திருந்தனர்.

1951ம் ஆண்டு அரசு திடீரென்று இந்தஆலயம் நன்கு நிர்வகிக்கப்படவில்லையென்று ஒரு ஒழுங்கு நடவடிக்கைக் குறிப்பை வெளியிட்டது. சட்டத்தில் இதை ''நோடிபிகேஷன்'' என்று சொல்கிறார்கள். – இதனை எதிர்த்து தீட்சிதர்கள் வழக்குத் தொடர்ந்து வெற்றி பெற்றனர். இந்த வெற்றிக்குக் காரணம் என்ன?



✕ வேங்கடராமன்

இந்தியக் குடியரசு அரசியல் சட்டத்தின் 25 மற்றும் 26வது பிரிவுகள் சில நியதிகளையும் கட்டுப்பாடுகளையும் கடைப்பிடிக்கின்ற ''மதப் பிரிவினர்'' (religious denominations) தங்களுக் கெனப் பிரத்தியேகக் கோவில்களை நிர்வகித்து, அதன்சொத்துக்களையும்பராமரிக்கலாம் என்று கூறுகின்றன. இதன்படி நடராஜர் கோவில் தீட்சிதர்கள் ஒரு மதப் பிரிவினர் என்று சென்னை உயர்நீதி மன்றம் தீர்மானித்தது. ஆகையால், சிதம்பரம் கோவிலையும், அதன் சொத்துக்களையும் காக்கும் உரிமை தீட்சிதர்களுக்கே உண்டு என்று தீர்ப்பு வழங்கப்பட்டது.

சிதம்பரம் தீட்சிதர்கள் தங்களுக்கென்றே சில கோட்பாடுகளையும், பழக்க வழக்கங்களையும் வைத்திருக்கிறார்கள், அவர்கள்

ஸ்மார்த்த பிராமணர்கள். அவர்கள் தலை முடியை இடது காதில் படும்படியாக முடிந்து கொள்கிறார்கள். இல்லைப் பெண் எல்லையைத் தாண்டாது என்பது ஒரு பழமொழி. அதன் படி தீட்சிதர்கள் தங்களுக்குள்ளேயே திரு மண சம்பந்தம் வைத்துக் கொள்கிறார்கள். திருமணமான 'தீட்சை' பெற்ற ஆண்களே கோவிலில் அபிஷேகம் செய்ய முடியும். அவர்களது இறை வழிபாடு வழக்கமான ஆகம முறையில் இல்லாமல், வேத முறைப்படி நடக்கிறது.

உயர் நீதிமன்றத்தின் தீர்ப்பை எதிர்த்து மாநில அரசு சுப்ரீம் கோர்ட்டில் அப்பீல் செய்தது. ஆனால் ஏனோ இந்த அப்பீல் வாபஸ் பெறப்பட்டது. 1951 ஆகஸ்டில் தான் வெளியிட்ட ஒழுங்கு நடவடிக்கைக் குறிப்பையும் 1954 மே மாதத்தில் அரசு ரத்து செய்தது.

இதற்குக் கால் நூற்றாண்டுக்குப் பிறகு 1980 ஏப்ரலில் ஹிந்து அறநிலையத் துறை சிதம்பரம் ஆலயத்துக்கு ஒரு நோட்டீஸ் அனுப்பியது. 1936 ஆண்டுத் திட்டத்தின்படி ஆலயத்தில் அர்ச்சனை டிக்கட்டுகளை ஏன் விற்கக் கூடாது, உண்டியல்களை ஏன் வைக்கக் கூடாது, கௌரவப் பார்வையாளர்களை ஏன் நியமிக்கக் கூடாது என்று மூன்று கேள்விகள் எழுப்பப்பட்டன. இம்மூன்றையும் அமல் படுத்தக் கோவில் விதி முறைகளில் இடம் இல்லை என்று தீட்சிதர்கள் பதில் அளித்தனர்.

அறநிலையத் துறை மறுபடியும் 1980 அக்டோபரில் தன் முந்திய மூன்று யோசனைகளை ஏன் அமுலாக்கக் கூடாது என்று மற்றொரு நோட்டீஸை அனுப்பியது. இதற்கும் தீட்சிதர்கள் பதில் அனுப்பினார்கள். பிறகு, அறநிலையத் துறை இந்த யோசனைகளைக் குறித்து 1981 ஜனவரி 5ந் தேதி விசாரணை நடத்தத் தீர்மானித்தது. இது பிப்ரவரி 9ம் தேதிக்கு ஒத்தி வைக்கப்பட்டது.

இதற்கிடையில் அறநிலையத் துறை ஆணையாளர் 1981 ஜனவரி 23ம் தேதி சிதம்பரம் ஆலயத்துக்கென ஒரு கௌரவப் பார்வையாளர்கள் குழுவை நியமித்தார். இதில் முன்னாள் நீதிபதி ஆர். சதாசிவம், என். மகாலிங்கம், வி. வி. சுவாமிநாதன், எல். இளையபெருமாள், சௌந்தரராகைலாசம் ஆகியோர் உறுப்பினர்களாக நியமிக்கப்பட்டனர். கோவிலின் கணக்குகளைச் சரிபார்த்தல், கட்டளைகள் சரியாக நடைபெறுகின்றனவா என்று மேற்பார்வையிடுதல், ஆகிய இரு முக்கிய பொறுப்புக்கள் மேற்படி குழுவிடம் ஒப்படைக்கப்பட்டன. ஆனால் இக்குழுவை நியமித்தது நீதிக்குப் புறம்பானது என்று தீட்சிதர்கள் உயர்நீதி மன்றத்தில் 'ரிட்' மனு தாக்கல் செய்தார்கள். இந்த மனுவை விசாரித்த நீதிபதி மோகன் மேற்படி கௌரவப் பார்வையாளர்களை நியமிக்க அற நிலையத் துறைக்கு அதிகாரம் இல்லை என்று தீர்ப்பளித்தார். இதற்குச் சட்டபூர்வமாக என்ன காரணங்கள்?

ஹிந்து மத அறநிலையச் சட்டத்தின் 73ம் பிரிவின்படி, ஆலய நிர்வாக முறை குறித்து அரசு ஒழுங்கு நடவடிக்கைக் குறிப்பை வெளியிட்டாலும், அல்லது வெளியிட்ட குறிப்பைப் பிறகு வாபஸ் வாங்கினாலும் அதுவரை அமலில் இருந்த நிர்வாக முறை தானாகவே ரத்தாகி விடும். இதன்படி 1951ம் ஆண்டு அரசு வெளியிட்ட ஒழுங்கு நடவடிக்கைக் குறிப்பினால் 1936ம் ஆண்டு அங்கீகரிக்கப்பட்ட நடைமுறைத் திட்டம் தானாகவே ரத்தாகிவிட்டது. அக்குறிப்பை 1954ல் வாபஸ் பெற்றதாலும் பயனில்லை. ஆகையால் 1936ம் ஆண்டுத் திட்டத்தின்படி ஓர் உத்தரவையும் பிறப்பிக்க அரசுக்கு அதிகாரம் இல்லை.

இப்போது அரசின் நிலை என்ன? அது மற்றுமொரு புதிய நிர்வாகத் திட்டத்தைப் பிறப்பிக்க வேண்டும். அரசியல் சட்டம் 25, 26ம் பிரிவுகள் கீழ் தாங்கள் ஒரு ''மதப் பிரிவினர்'' என்ற அடிப்படையில் தீட்சிதர்கள் எந்தப் புதிய திட்டத்தையும் எதிர்ப்பார்கள். மேலும், சிதம்பரம் போன்றே வேறு சில கோயில்களும் சுதந்திரமாக இயங்குவதை எடுத்துக் காட்டுவார்கள். ஏற்கனவே இந்த அரசியல் சட்டப் பிரிவின்படி கர்நாடக மாநிலம் மூல்கி என்ற இடத்தில் உள்ள வேங்கடரமண கோவிலும், சென்னையில் உள்ள கன்னிகா பரமேஸ்வரி கோவிலும் தனித்து இயங்குகின்றன என்று சுட்டிக் காட்டினார் வழக்கறிஞர் வேங்கடராமன்.

விடைகள்:

1 ஆ காளிதாஸ்
2 இ ஹரிதாஸ்
3 இ ஸ்ரீமுருகன்
4 இ சந்திரலேகா
5 அ ஒன்று
6 ஆ அந்த நாள்
7 இ மலைக்கள்ளன்
8 ஆ அலிபாபாவும் 40 திருடர்களும்
9 இ வீரபாண்டிய கட்டபொம்மன்
10 இ ராஜராஜ சோழன்

10ம் சரியானால் அற்புதம். 6 முதல் 9 அருமை. 3 முதல் 5 – மகிழ்ச்சி. அதற்கும் கீழே – சோகம்.

மகன்: அப்பா! ''கவுன்சிலர்கள்''னு யாருப்பா?

அப்பா: யாருக்குடா தெரியும்! வேணு உங்க தாத்தாவைக் கேட்டுப் பாரு! அவருக்குத் தெரிஞ்சிருக்கலாம்!

வெ. சீதாராமன்




நான் சிறுவனாக இருந்தபொழுது என் பெற்றோர் கடன் தொல்லையால் அவதிப்பட்டார்கள். வீட்டில் சாப்பாட்டிற்கே கஷ்டம். என் தகப்பனார் சம்பாதிக்கும் பணம் எல்லாம் கடன் அடைக்கவே போதுமானதாக இருந்தது!
என் உடன்பிறந்தவர்கள் யாரும் படிக்க முடியவில்லை! நான் மட்டும் விடாமுயற்சியுடன் கஷ்டப்பட்டுப் படித்து முன்னேறினேன். ஒரு நல்ல வேலையில் சேர்ந்து, இன்று நிறைய சம்பளம் வாங்குகிறேன்!
இன்று அழகான வீடு ஒன்று கட்டியிருக்கிறேன். நல்ல கார் ஒன்று வைத்திருக்கிறேன். வீட்டில் டி.வி, ஃப்ரிட்ஜ் போன்ற எல்லா வசதிகளும் இருக்கின்றன.
நான் சொன்னால் நீங்கள் நம்பமாட்டீர்கள்! நான் வாங்கும் சம்பளம் என்னுடைய கடனை அடைக்கவே போதவில்லை!
?!
JONES


அதோ பாருடா! ஒரு ஏர்பஸ்!
JONES



✖ பெரைரா

# அமைதியான ஓர் ஆட்டம்!



✖ சேத்தி

● பம்பாயில் உலகக் கோப்பைக்கான ஹாக்கிப் பந்தயத்தைக் காண வந்திருந்த டச்சுப் பத்திரிகை நிருபர்கள் இருவருக்குத் தேவைப்பட்ட டெலிபோன் வசதிகளைச் செய்து கொடுத்தார் ஓர் இந்தியர். நன்றியுடன் அவர்கள், தங்களுக்கு உதவியவரின் பெயரை அறிய விரும்பினர். "நான் மைக்கேல் பெரைரா: பில்லியர்ட்ஸ் ஆட்டக்காரன். இப்போதைக்கு உலக சாம்பியனும் கூட!" என்ற பதிலைக் கேட்டுப் பிரமித்து விட்டனர். ஓர் உலக சாம்பியனின் அடக்கத்தைக் கண்டு அவர்களுக்கு ஒரே வியப்பு!

● இரு முறை உலக சாம்பியனை இங்கிலாந்து பில்லியர்ட்ஸ் சாம்பியன் நார்மன் டாக்லேயுடன் ஆடி உலக சாம்பியன் பட்டத்தைப் பறித்துக் கொண்டவர் மைக்கேல் பெரைரா. ஆனால் 1977ல் முதல் தடவையாகத் தேசிய பதவியை வென்றதைத் தான் 'திரில்' என்று கூறுகிறார் மைக்கேல். இவரது உலக சாதனை 'கின்னஸ் புக்'கில் உள்ளது.

● மைக்கேல் பெரைரா ஒரு வக்கீல். மனைவி ஃபே (Fay) மேற்கத்திய இசையில் வல்லுநர். ஹிந்திப் படங்களில் பாடியிருக்கிறார். இவர்களது மகன் மார்க், டென்னிஸில் ஜொலிக்கும் இளம் நட்சத்திரம்.

● பில்லியர்ட்ஸில் நாற்பது வயது நெருங்கும்போதுதான் உலக சாதனைக்கான முதிர்ச்சி ஏற்படுகிறது. மற்ற விளையாட்டுக்களில் வயது ஏற ஏற ஆட்டத் திறன் குறைந்து ரிட்டயர் ஆகிற நிலை வரும். ஆனால் பில்லியர்ட்ஸில் வயது ஏற ஏற ஆட்டத்தில் முதிர்ச்சி! இவரது highest break 783. கல்கத்தா மாட்சில் 1149.

● சென்னை சர்வகலாசாலை இன்டோர் ஸ்டேடியத்தில் தமிழக பில்லியர்ட்ஸ் கழக ஆதரவில் தேசியப் போட்டி நடைபெற்றது. பில்லியர்ட்ஸ், ஸ்னூக்கர் ஆகியன அதிகமாய்ப் பிரபலமடையாததற்குக் காரணம் அவை விலைப் கேம்கள் என்பதுஒன்று. மேலும் விலைமதிப்புள்ள இறக்குமதி செய்யப்பட்ட மேஜை தேவை. பதினெட்டு வயதுக்குக் கீழ் உள்ளவர்கள் பங்கேற்க இயலாது. உயரம் போதாது! நான்கு மணி நேரம் போட்டி நீடிக்கும். முழு அமைதியில் நடக்கும் விளையாட்டுக்கள்! சத்தத்துக்கே இடமில்லை! மற்ற ஆட்டங்களைப் போல் பார்வையாளர் உணர்ச்சிவசப்பட்டு உற்சாகமாய்க் கூச்சலிட முடியாது!

● 1980ம் வருஷ பில்லியர்ட்ஸ், ஸ்னூக்கர் ஜூனியர் சாம்பியன் கீத் சேத்தி. பஞ்சாப் மாநிலத்தைச் சேர்ந்தவர். ஆமதாபாத்தில் எம்.பி.ஏ. படிப்பவர். இருபது வயதான கீத் சேத்திக்கு உலகப் போட்டிகளில் சுடர் விட்டுப் பிரகாசிக்கும் அளவுக்கு ஆட்டத்திறமை இருப்பதாக உலக சாம்பியன் பெரைரா இப்போதே சொல்லிவிட்டார்! அவர் தேசிய ஜூனியர் ஸ்னூக்கர் சாம்பியனாகி விட்டார். இனிமேலும் பல வெற்றிகளுக்கு வாய்ப்புண்டு.

—குண்டுமணி

படங்கள்: உத்ரா





## இரட்டை மனிதன்

இரட்டை மனிதன் படத்துக்கு இலட்சிய நடிகர் எஸ். எஸ். ராஜேந்திரன் கதை, திரைக்கதை, வசனம் அனைத்தும் எழுதியிருக்கிறார் 'கோல்மால்' படத்துக்கும் இவர்தான் கதை எழுதியிருப்பார் போலிருக்கே! தமிழில் ரஜினி வெளுத்து வாங்கிய கேரக்டரில் இலட்சிய நடிகர் தெள்ளு தமிழ் பேசி நடிக்கிறார்.

படத்தின் ஒவ்வொரு ஃபிரேமிலும் எங்காவது புரட்சித் தலைவரின் படமோ, இரட்டை இலையோ, கருப்பு சிவப்போ தெரிந்தே திருகிறது. பின்னணி இசைக்கு வெறும் ஜால்ரா உபயோகித்திருக்கலாம். கதாநாயகனை இவ்வளவு நல்லவனாகப் பார்த்து ரொம்ப நாளாகிறது. பொய் பேச மாட்டான். ஏக காதலி விரதம் வேறு. விரத பங்கங்களைக் கஷ்டப்பட்டு உடைக்கிறான். தன்னைக் கற்பழிக்க(!) விரட்டும் நங்கையிடமிருந்து படாத பாடு பட்டுத் தன் கற்பைக் காத்துக் கொள்ளும் கற்புக் கரசன். தங்கையை உச்சி மோந்து சீராட்டும் சினிமா அண்ணன். தங்கையாய் சுமித்ரா. அப்படியானால் தங்கையின் காதலனாக, வில்லனாக ஜெய் கணேஷ் நடிக்கிறார் என்று ஊகிக்காதவர்களுக்கு இந்தப் படத்தை மூன்று தடவை பார்க்கும் கொடிய தண்டனை கொடுக்கலாம். லதா கதாநாயகி. 'ஒ'வென்று இரையும் வி. கே. ராமசாமியும் செத்தும் கொடுக்கும் சுருளியும் நகைச்சுவைக்கு.

பாடல்கள், பின்னணி இசை, வசனம், காமெடி, இத்யாதி இத்யாதியை இந்தப் படம் ஒரு இருபது வருஷத்துக்கு முன்னால் வந்திருந்தால் பாராட்டியிருக்கலாம்.

## அர்ச்சனைபூக்கள்

பாக்யராஜின் சீடராய் இருந்தும்கூட வித்தியாசமான கதை அமைப்பையும் கேமராவுக்கு ஜெயனையும், இசைக்கு இளையராஜாவையும் தேர்ந்தெடுத்ததில் டைரக்டர் கோகுலகிருஷ்ணா குருவிடமிருந்து வேறுபடுகிறார். ஒரு பெண் ஓர் ஆணின் வாழ்க்கையை எவ்வளவு பாதிக்க முடியும் என்பதிலிருந்து முரட்டு வைராக்கியத்தை எளிய அன்பு தகர்ப்பது வரை நன்றாகச் சொல்லியிருக்கிறார்.

கணபதி சாஸ்திரிகளாக பூர்ணம் விசுவநாதனும், சிஷ்யன் காத்தானாக சங்கிலி முருகனும் அற்புதமாக இந்த வேடங்களில்.

ஆர்ப்பாட்டம் இல்லாத ஜோடி மோகன்—ராஜலட்சுமி. கவிதாவும் சந்திரசேகரும் மற்றொரு ஜோடி. குறும்பும் கண்ணியமும் கலந்து மலரும் காதல்.

குளுமையான படப் பிடிப்பு — அருமையான இசையமைப்பு — திருப்தியற்ற படத் தொகுப்பு. படத்தை பெரும் துண்டுகளாய்ப் பிரித்துக் காண்பிப்பதால் ரசிக்க முடியவில்லை. ஊருக்குள் வந்த மாட்டுவண்டி, தெருவுக்குள் வருவதற்குள் ராஜலட்சுமிக்கு ஒரு பாடலும், விரிவானதிருமணச்சடங்கும்நடந்துவிடுகிறது. தேவையற்ற குறியீட்டுக் காட்சிகள்—மனோரமா தலையில் ஐஸ், பூர்ணம் நெஞ்சில் கத்தி பாய்வது, இன்னும் நிறைய. ஏழை லைப்ரரியன் சந்திரசேகர் சென்னையில் லட்சாதிபதி வாழ்க்கை எப்படி வாழ்கிறார் என்று கொஞ்சம் விளக்கியிருக்கலாம். காத்தான் எம். ஜி. ஆர். பனியன் அணிந்து கொண்டு குடிக்க மாட்டானாம். பாவம் அவனுக்குக் 'கடையை'த் திறந்தவரே அவர்தான் என்று தெரியாது போலும். இப்படியுமா ஜால்ரா?

கடலோர தேடி வீச, மீனவ சமுதாயத்தின் பிரச்னைகளும், சாகஸங்களும் காதலும், கடைசியில் நம்பிக்கையும் கலந்து தந்த தாமரை செந்தூர் பாண்டியின் 'அலைகள் ஓய்வதில்லை' நாவல், திரைக்காகச் சின்னாபின்னப்படுத்தப்பட்டு வெறும் காதல் கதையாக மாற்றப்பட்டிருக்கிறது. புண்ணியம் கட்டிக் கொண்டவர், பஞ்சு அருணாசலம்.

டைரக்டர் பரணி, ஒளிப் பதிவாளர் பிரபாகர், ஹீரோ சிவகுமார் அனைவரும் ஓவியர்கள். ஆகவே படம் மாறுபட்டதாயிருக்கும் என்று நினைத்தால் ஏமாற்றம்! யதார்த்தப் பாதையில் ஒரு சென்டி மீட்டர் அளவுக்குக் கூடச் செல்ல விரும்பவில்லை போலும். கடலோரக் கிராமத்தில் லிப்ஸ்டிக் மேக்கப் சகிதம் அலையும் குமரிகள், கல்யாண மேடையில் கூட நாலு நாள் தாடியுடன் இருக்கும் சிவசந்திரன், செயற்கையான செட்டுகள், காதல் தோல்வியுற்றவுடன் மகா தாடியுடன் மணல் வெளியில் கனவுகளைக் கலைந்து செல்லும்படி இறைஞ்சும் சிவகுமார், இவருக்கு மேலும் ஒரு சோகப் பாட்டு, கிளைமாக்ஸில் மழையில் நனைந்து கொண்டு அதே பாட்டைப் பாடும் கதாநாயகி... அபத்தக் களஞ்சியம்!

இருண்ட கடற்கரையில் பளீரென்று அடிக்கும் ஆர்க்லாம்ப் வெளிச்சத்தில் இறக்கப் போகும் தருணத்தில் முத்துவும் கண்ணம்மாவும் ஒருவரை ஒருவர் நோக்கி இஞ்ச் இஞ்சாக ஊர்ந்து செல்லும்போது, நமக்கு வருவது அடுக்கடுக்காய் கொட்டாவி.

சுலபமாய்க் கடலையும் கரையையும் படமெடுத்த பிரபாகர், உட்புறப்படப் பிடிப்பில் ரொம்ப சாதாரணமாய், ஏனோ தானோ என்று எடுத்திருக்கிறார்.

தனித்து நிற்பவர் இளையராஜா. இசை விழலுக்கு இறைத்த நீர். நம் நேரமும் பணமும் கூடத்தான்.

—சிந்து ஜீவா

இளமையான கார்த்திக்கும் இளமையான ராதாவும், இளமையான சுரேஷும் இளமையான விஜய சாந்தியும் ஜோடி சேர்த்துக் கொண்டு ஆரம்ப முதல் முடிவுவரை ஆடிப் பாடிக் கும்மாளத்துடன் பேட் செய்கிறார்கள். எடுக்கும் ரன்களோ மிகக் குறைந்தவை தான்.

படம் பூரா மிகைப்படுத்தப்பட்ட நிலையில் நகைச்சுவைப் பிட்சில் ஆடப்படுவதால் தரமான விளையாட்டை எதிர்பார்க்க முடியாமல் போய்விட்டது. வசனம், காட்சிகள், பாடல்கள் அனைத்திலும் செக்ஸை வைத்து அழுகுணி அடிக்கிறார்கள். போன மாட்ச்களில் நம்பிக்கையுடன் டீமை நடத்திய கேப்டன் இராம. நாராயணன் சராசரிக்கும் கீழே போகிறார். இன்னிங்ஸ் டிபீட்.

அடுத்த பந்து எப்படி வரும், பேட்டில் பட்டு எந்தத் திசையில் செல்லும் என்றுநாம் வெகு சுலபமாய்க் கணிக்கும் அளவுக்கு மூன்றாந்தரமாய் உள்ள மேட்ச். ராதா, விஜயசாந்தி, கைகளில் விலங்கிருக்க எப்படி அவர்களால் உடையை மாற்றிக்கொள்ள முடிந்தது? – போன்ற அம்பயரிங் தவறுகள் நிறையவே உண்டு.

ஸ்கோர் போர்ட்:

| | | |
|---|---|---|
| இராம நாராயணன் | (போல்ட்) | 10 |
| சுரேஷ் | (காட்) | 18 |
| விஜயசாந்தி | ,, | 9 |
| கார்த்திக் | ,, | 19 |
| ராதா | ,, | 10 |
| 5 விக்கெட்டுகள் இழப்புக்கு | | 66 |

—நளினி சாஸ்திரி

## ஆனந்த ராகம்



## இளஞ் ஜோடிகள்







✕ ரெஜி உங்கண்ணாவிட மிருந்து பட்டாசு வந்ததா?! என் கடிதம் கிடைத்ததா?! இமே:

✕ இந்தப் பயல் சைஞ எல்லைப் போருக்குத்தான் அனுப்பணும். இவன் யாருன்னு தெரியுமா? அவன் தலை முடியைப் பாத்தாலே கண்டு பிடிச்சிரலாமே?

"என் கணவருக்குக் கடிதங்களில் படம் போடும் பழக்கம் எங்கள் திருமணத்துக்கு முன்பிருந்தே உண்டு. அப்படி அவர் பலருக்கும் பல கடிதங்கள் எழுதியுள்ளார். எங்கள் தலை தீபாவளியின்போது அவர் சென்னையில் இருந்தார். எங்களுடன் தீபாவளிக் கொண்டாட்டத்தில் கலந்துகொள்ள முடியாத சூழ்நிலை. வீட்டில் அப்போது இருந்த பதினைந்து பேரையும் படம் போட்டு எழுதிய இந்தக் கடிதம் எனக்கு மட்டுமின்றி அவருக்குக் கூடப் பொக்கிஷம். கீழே உள்ள படத்தில் வலது கோடியி

# பொக்கிஷம்

லிருந்து இரண்டாவது பெண்மணி நான். படத்தில் உள்ள சிறுவர்கள் எல்லோரும் இன்று இளைஞர்கள். அத்தனை பேரும் இன்று ஒவ்வோர் இடத்தில் இருக்கிறோம். படத்தில் உள்ள ஒவ்வொருவரும் எங்கள் வீட்டுக்கு வரும் சமயம் இந்தக் கடிதத்தைப் பார்த்துப் படித்து எத்தனை சந்தோஷப்படுகிறார்கள், தெரியுமா? அவர் எந்தக் கடிதம் எழுதினாலும் எதிரே நின்று பேசுவது போலத்தான் எழுதுவார். அவரிடமிருந்து கடிதம் வந்தால் போதும்..வீட்டில் அத்தனை பேரும் பத்திரிகை போல் போட்டி போட்டுக் கொண்டு படிப்பார்கள்." என்று லேசாகப் புன்முறுவல் பூத்தபடி கடிதத்தைத் தருகிறார் ஓவியர் ஜெயராஜின் மனைவி திருமதி ரெஜினா ஜெயராஜ்.

ஜெயராஜ் கடிதத்தின் சில சுவையான பகுதிகளும் அவரே அதில் எழுதியுள்ள பட விளக்கங்களும்:

என் அன்புள்ள,



எல்லோருக்கும்,

ரெஜிபுருசங்காரன் எழுதுவது என்னவென்றால் இங்கு நான் நல்ல சுகம். அதுபோல அங்கு உங்கள் ஒண்ணு ரெண்டு மூணு.... பதினைந்து பேர் சுகத்தையும் அறிய ஆவல்... ரெஜி, நான் உனக்கு நேற்று போஸ்ட் பண்ணிய கடிதம் இந்நேரம் கிடைத்திருக்கும் என்று நினைக்கிறேன். ஒழுங்கா இந்தக் கடிதம் கிடைத்ததும் பதில் போஸ்ட் பண்ணிவிடு ஆமா....! நான் கேட்டிருந்த கேள்விகளுக்கெல்லாம் கவனமாகக் கடிதம்பார்த்துப் பதில் எழுது. ரெஜி, எல்லாரும் என்னைப் பாத்து இன்று நமக்குத் 'தலை தீபாவளி'ன்னு கேலி பண்றாங்க. ஆனா நம்ம ரெண்டு பேரும் தான்ஒண்ணா இல்லை.... ராணி நான் இந்தத் தடவைக்கு முந்தின தடவை என் கல்யாணத்துக்கு வந்திருந்தப்போ நீ நல்லா புஸ்ஸுன்னு இருந்தே. இப்போ வந்திருக்கும்போது நீ ரொம்ப மெலிஞ்சிருக்கியே. இந்த வித்தியாசம் நல்லாத் தெரியுது. நாம் வீட்டோடு ஜெயராஜ் ஸ்டுடியோவில் எடுத்த குரூப் போட்டோவில் நீ எவ்வளவு அழகா, குண்டா இருக்கிறே. ஆனா இந்தத் தடவை வைகை டாமில் எடுத்த படத்தில் நீ ரொம்ப மெலிந்திருக்கிறே. கண்ணெல்லாம் குழி விழுந்திருக்கிறமாதிரி கூட தெரியுது. அந்தப் படத்தை ரெஜி லெட்டரில இருந்து எடுத்து மொதல்ல பாத்தவுடனே எனக்கு ரொம்ப வருத்தமா யிருந்தது. ராணி, இந்த பாரு. நீ இப்பவெல்லாம் முன்னைப் போல் சரியாச் சாப்பிடாததுதான் அது காரணம். நீ இப்படி சரியா சாப்பிடாததாலும் அடிக்கொருதரம் மனசை வீணா அலட்டிக் கொள்வதும் வீணா உன் அழகைத்தான் கெடுக்கும். சொல்லிட்டேன். தயவு செய்து ஒழுங்காச் சாப்பிடு எனக்காக. ரெஜி, நீ அவளைச் சாப்பாட்டு விசயத்ல நல்லா பாத்துக்க. அது உன் பொறுப்பு என்ன....



....இந்த வரியிலிருந்து நான் குமுதம் ஆபீசிலிருந்து எழுதுகிறேன்.... இப்பொழுது குமுதம் ஆபீஸ் புதுசா பெரிசா கட்டியிருக்கிறார்கள்....

ரெஜி நீ பதில் எழுதும்போது காலையிலிருந்து மாலைவரை என்னென்லாம் செய்வாய்? எப்படிப் பொழுது போகும் என்பதையெல்லாம் வளவளன்னு எழுது. என்னா எனக்குப் படிக்க ஜாலியா இருக்கும்....

பேட்டி : எஸ். சந்திரமௌலி

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press Race Course Road Guindy, Madras-600 032. (Phone : 431543)
Assistant Editor: P.S. Mani
Editor: K. Rajendran

